## அரசியல்



70

தி.மு.க.வைக்
கண்டு
பயமா?

## ஆன்மிகம்



64

ஆயிரம்
சூரியப்
பிரகாசம்!

## ஆரோக்யம்



44

யோக்கியத்தில்
இருக்கிறது
ஆரோக்கியம்!

## அறிவு



78

ஏறுமுகமாகும்
ஏர்ஹோஸ்டஸ்
படிப்பு!

## கலை



80

வரலாறு, தலைமகன்
விமர்சனம்

# கல்கி

19.11.2006





# அமெரிக்காவை

**ஜி.எஸ்.எஸ்.**

இரண்டரை ஆண்டுகால விசாரணையைத் தொடர்ந்து சதாம் உசேனுக்குத் தூக்குத் தண்டனை அளிக்கப்பட்டிருக்கிறது.

"எனக்கு மரண தண்டனை அளித்தால் அது துப்பாக்கியின் மூலம் இருக்கட்டும்" என்ற சதாமின் வேண்டுகோள் மறுக்கப்பட்டுள்ளது.

தூக்குத் தண்டனை உடனடியாக நிறைவேறாது. சதாம் தரப்பு விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், இராக் சட்டப்படி, ஒன்பது நீதிபதிகள் அடங்கிய விசாரணை நீதிமன்றத்துக்கு எல்லா மரண தண்டனை முடிவுகளும் எடுத்துச் செல்லப்படும். ஆக, தீர்ப்பை அமல்படுத்த ஒரு வருடம் ஆகலாம்.

பலரும் தங்கள் மாறுபட்ட கருத்தைத் தெரிவித்திருக்கிறார்கள்.

"சீக்கிரமே அரக்கன் சதாமுக்கு மரண தண்டனை அளிக்கப்பட்டால் நல்லது" என்று தீர்ப்புக்கு முன்பாகவே கருத்து தெரிவித்தவர் தற்போதைய இராக் பிரதமர். இவர் ஷியா இனத்தைச் சேர்ந்தவர். இனத்தைக் குறிப்பிடக் காரணம் உண்டு. பாக்தாத் நகருக்கு வடக்கே உள்ள துஜைல் என்ற பகுதியில் 148 பேரைக் கொல்ல உத்தரவிட்டார் என்ற வழக்கில்தான் சதாமுக்கு மரண தண்டனை வழங்கப்பட்டிருக்கிறது. கொல்லப்பட்டவர்கள் ஷியா பிரிவைச் சேர்ந்தவர்கள்.

ஐரோப்பிய யூனியன், தீர்ப்பை வரவேற்றிருக்கிறது. ஆனால் மரண தண்டனை மட்டும் வேண்டாமென்கிறது. புஷ் இந்தத் தீர்ப்பை "ஒரு கொடுங்கோலனின் ஆட்சியை அகற்றி, சட்டபூர்வமான ஆட்சியை அமர்த்தும் இராக் மக்களின் முயற்சியில் இது ஒரு மைல்கல்" என்றிருக்கிறார். இரான் அரசும் (எதிர்பார்த்தபடியே) தீர்ப்பை வரவேற்றிருக்கிறது. கூடவே "மற்ற குற்றங்களுக்காகக்கூட சதாம் விசாரிக்கப்பட வேண்டும்" என்று கூறியுள்ளது.

கண்டனக் குரல்களுக்கும் பஞ்சமில்லை. "கண்ணைப் பறித்தவனின் கண்ணைப் பறி என்கிற பழைய கால நீதிமுறை இது" என்கிறது வாடிகன்.

தாய்லாந்தைச் சேர்ந்த முஸ்லிம் அறிஞரான விடயா வைஸ்த்ரட் என்பவர் கூறியுள்ளது குறிப்பிடத்தக்கது. "சதாம் இறந்துவிட்டால் அமெரிக்கர்கள் இனி பாதுகாப்பாக உணரலாம் என்று உள்ளூரில் புஷ் குறிப்பிடலாம். ஆனால், சதாம் இறந்தபிறகுதான் அமெரிக்கர்களுக்கு உண்மையான ஆபத்து காத்திருக்கிறது என்று தோன்றுகிறது" என்கிறார்.

சர்வதேச மனித உரிமைக் கழகம்



ரபு விடுதலை முன்னணி என்று பல அமைப்பு
ன் தூக்குத் தண்டனைக்கு எதிரான குரல்களை எழுப்பியுள்ளன.

"அப்படிப் பார்த்தால் சதாம் செய்த கொலைகளைவிட அதிக அளவிலான கொலைகளை இராக்கில் கடந்த மூன்றரை வருடங்களில் அமெரிக்கா செய்திருக்கிறது. அமெரிக்காவைத் தண்டிப்பது யார்?'' என்கிறது பாகிஸ்தானில் இயங்கும் எதிர்கட்சிக் கூட்டணி.

படுகொலைக்கான உத்தரவில் சதாம் உசேன் கையெழுத்திட்ட ஆவணம் உட்பட பல ஆதார பூர்வமான சாட்சிகள் சதாமுக்கெதிராக இருந்தன.

''சர்வதேச நீதி அளவுகோலின்படி விசாரணை நடக்கவில்லை. எனினும் இப்படி ஒரு வெளிப்படையான விசாரணை நடந்ததே இராக்கின் சரித்திரத்தில்

# ண்டிப்பது யார்?

மகிழத்தக்க மைல்கல்தான்'' என்பதே பெரும்
பாலான அமெரிக்க வழக்கறிஞர்களின் கருத்தாக
உள்ளது.

எல்லாம் சரிதான். ஆனால் சதாமுக்கு அளிக்
கப்பட்ட தண்டனையை விமர்சிப்பவர்கள்
யாருமே 'சதாம் இந்தக் குற்றங்களைச் செய்திருக்க
மாட்டார்' என்று கூறவில்லை.

ஆக, சதாமுக்கு ஆதரவான குரல்களில் மிகப்
பெரும்பாலானவை உண்மையில் அவருக்கு
ஆதரவானவை அல்ல. அவை அமெரிக்க எதிர்ப்
புக் குரல்கள்! ●




**கல்கி**

ஒவ்வொரு இதழும் உங்கள் வேட்கைக்கு

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர் :
லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

தலைமை உதவி ஆசிரியர் :
மு.மாறன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்
எம். மோகன்
ச. கார்த்திகேயன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 2225 1021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

**இலட்சங்களுக்காக சினிமாவுக்கு வருபவர் பலர். இலட்சியத்தோடு சினிமாவைத் தேர்ந்தெடுப்பவர் சிலர். இதில் இரண்டாவது ரகம் எஸ்.பி.ஜனநாதன். தமது பின்னணியின் உந்துதலால் திரையுலகில் பிரவேசித்து 'இயற்கை' தந்தவர். இன்று 'ஈ'. மூலம் எல்லாத் தரப்பினரின் பாராட்டுதலையும் பெற்றுள்ளார்.**

ஆழ்வார்ப்பேட்டையின் ஒரு குறுகலான சந்தின், பழைமையான வீட்டு மாடி அறை ஒன்றில் சந்தித்தோம். அறையில் ஐந்தாறு உதவியாளர்கள் அடுத்த உழைப்புக்காய் உறங்கிக் கொண்டிருக்க, அவர்களைத் தொந்தரவு செய்யாமல் நம்மிடம் பேசத் துவங்குகிறார் ஜனநாதன்...

**சினிமாவில் இது 'தாதா சீசன்!' நீங்கள் மட்டும் எப்படி 'பயோ வார்' விஷயத்தை கையிலெடுத்தீர்கள்?**

" 'இவர் நல்ல படமா எடுப்பார். ஆனா ஜனங்க பார்க்க மாட்டாங்க' - தரமான படம் தர நினைக்கிற பல இயக்குநர்களுக்கு இப்படியொரு முத்திரையைத்தான் குத்தி விடுகிறார்கள். 'இயற்கை' படத்துக்குப் பிறகு எனக்கும்கூட அப்படியொரு பெயர் இருந்தது. அதை உடைத்து நொறுக்கிக் காட்ட வேண்டும் என்ற பிடிவாதத்துக்குப் பிறந்தவன்தான் ஈ."

**உங்களது 'கதைத் தேர்வு' எந்த விதமாய் அமைகிறது?**

"நம்மைச் சுற்றி ஆயிரம் அநீதிகள் நிகழ்ந்த வண்ணம் இருக்கின்றன. அவற்றைக் கவனித்தாலே போதும் நமக்குக் கதை கிடைத்துவிடும். ஏன், நமது பாரம்பரியமே கதை சொல்லிப் பாரம்பரியம்தானே! இந்தியர்களைப் போன்ற சிறந்த கதை சொல்லிகள் வேறெங்கும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. உலக இலக்கியங்கள் காட்டுகின்ற கதாபாத்திரங்களுக்கு மேலான கதாபாத்திரங்கள் நம்முடையவை."

**செக்ஸ், வன்முறை, சக மனிதனைத் துன்புறுத்தும் நகைச்சுவை... தமிழ் சினிமாவில் இவைதான் கமர்ஷியல் அம்சங்களாக ஆகிவிட்டனவே...**

"இதில் எனக்குத் துளியும் உடன்பாடில்லை. ஒரு கதைக்கு எல்லா உணர்ச்சிகளும் தேவை என்பதை நான் மறுக்கவில்லை. ஆனால், ஒவ்வொரு உணர்ச்சியையும் எத்தனை கண்ணியமாகக் கையாள்கிறோம் என்பதில்தான் வெற்றியின் ரகசியம் அடங்கியிருக்கிறது. எந்த விஷயம் மக்களைச் சிந்திக்க வைக்கிறதோ, சக மனிதனைப் பற்றிக் கவலை கொள்ள வைக்கிறதோ... அதுதான் தலைசிறந்த கமர்ஷியல்."



# பிடிவாதத்துக்கு

**'ஈ' கதையை தயாரிப்பாளரிடம் எப்படி ஒப்புக்கொள்ள வைத்தீர்கள்?**

"அறுபது படங்கள் கொடுத்த வெற்றித் தயாரிப்பாளர் ஆர்.பி.சௌத்ரி. கதை அவருக்குத் திருப்திதான் என்றாலும், பயோ வார் என்கிற விஷயத்தை மக்களுக்குப் புரிகிற மாதிரி சொல்ல முடியுமா என்றுதான் கேட்டார். அது

என்னுடைய பொறுப்பு என்றதும் மறுப்பின்றி ஒப்புக்கொண்டார்.''

**'ஈ' கேரக்டரை ரத்தமும் சதையுமாக எப்படி உலவவிட முடிந்தது?**

''நிறைய கதைகள் பெரிய பெரிய ஹீரோக்களுக்காக உருவாகும் இந்தச் சூழலில், இப்படி ஒரு கேரக்டரில் நடிக்க ஜீவா சம்மதித்தது எனக்குச் சந்தோஷமளித்தது. இந்தக் கதை நம்மை பெரிய அளவுக்குப் பேசவைக்கும் என்ற ஜீவாவின் அனுமானம் பாராட்டப்பட வேண்டிய ஒன்று. அவரின் ஒத்துழைப்புதான் உங்களின் கேள்விக்குப் பதில்!''

**அரசியல் கோபத்தில் இந்தப் படத்தைத் தந்திருக்கிறீர்களா என்ன?**

''அரசியல் கோபம் என்று சொல்வதைவிட சமூகக் கோபம் என்பதுதான் சரியாக இருக்கும். ஜாதி, மத, இன அரசியலைத் தாண்டி சமூக விடுதலை காண்பதற்கான தலைவர்களைக் காணோமே என்ற ஆதங்கம் என்னிடம் நிறைய உண்டு. மார்க்ஸியத்தின் மீது அசைக்க முடியாத நம்பிக்கை கொண்ட ஒரு சினிமாக் கலைஞனாக, எனக்குத் தெரிந்த மாற்று அரசியலை மெல்லிய நூலிழை போலச் சொல்லியிருக்கிறேன், அவ்வளவுதான்.''

**நீங்கள் உதவி இயக்குநரிலிருந்து, இயக்குநர் ப்ரமோஷன் பெற நீண்ட காலம் தேவைப்பட்டதற்குக் காரணம் என்ன?**

''சுயமரியாதைமிக்க குடும்பப் பின்னணிதான். ஒவ்வொரு வாசலாய் ஏறி இறங்கி அவமானப்பட்டுப் படம் பண்ண எனக்கு விருப்பமில்லை. முதல் படமான 'இயற்கை'யும் நான் துளிக்கூட அவமானப்படாமல் எடுத்ததுதான். இந்தப் படமும் அப்படித்தான். சுயம் இழந்து வாழ்வதில் எனக்குச் சம்மதமில்லை.''



# ...றந்தவன் ஈ!



**'ஈ'யின் வெற்றி உங்களை எந்தவிதத்தில் திருப்திபடுத்தியுள்ளது?**

''எல்லாத் தரப்பினரும் பாராட்டுகிறார்கள். முன்வரிசைப் பார்வையாளர்களும் உணர்ந்து, மகிழ்ந்து கைதட்டுவது எனக்குச் சந்தோஷத்தைத் தருகிறது. எந்தப் பூடகமான விஷயத்தையும் மக்களுக்குப் புரிகிற வகையில் சொன்னால், அதைக் கொண்டாடி வரவேற்பார்கள் என்று புரிகிறது. இந்த நேரத்தில் இதுபோன்ற புது முயற்சிக்கு ஒத்துழைப்பு தந்த தயாரிப்பாளருக்கு நன்றி சொல்வதை நான் கடமையாக நினைக்கின்றேன்.''

**- ஆர்.சி. ஜெயந்தன்**

படம் : **பொள்ளாச்சி சுந்தரம்**

# துள்ளித் திரிந்த காலம்

என் வாழ்க்கையின் மிக மகிழ்ச்சியான தருணங்கள், எனக்குப் புத்தகங்கள் அறிமுகமான நிமிடங்கள்தான். நான் பள்ளியில் ஏழாம் வகுப்புப் படிக்கும்போது அது நிகழ்ந்திருக்கலாம். அப்பாவின் உதவியாளர் சண்முகநாதன்தான் முதன் முதலில் 'பொன்னியின் செல்வன்', 'சிவகாமியின் சபதம்' புத்தகங்களைக் கொடுத்துப் படிக்கச் சொன்னார். அந்த வயதில் எனக்குள் பிரமிப்பை ஏற்படுத்திய புத்தகங்கள் அவை. தொடர்ந்து நல்ல தமிழ், ஆங்கிலப் புத்தகங்கள் என்று என் வாசிக்கும் பழக்கம் தொடர்ந்தது.

சர்ச் பார்க்கில் படிக்கும்போது, என் தோழிகளின் ஒத்துழைப்புடன் பல நாடகங்களை நடத்தும் வாய்ப்புக் கிடைத்தது. அப்போதுதான் நல்ல தமிழ் பேச வேண்டும் என்று ஆர்வம் வளர்ந்தது. இதற்கு உரம் போட்டவர்களுள் என் தமிழாசிரியை சந்திரகுமாரியும் ஒருவர். என் பள்ளி வாழ்க்கையில் நான் மறக்க முடியாத மற்றொரு டீச்சர் கோன் சன்வேஸ்தான். ஒவ்வொரு மாணவி மீதும் அவர் தனிக் கவனம் செலுத்துவார்.

ப்ளஸ் 2 முடித்த பிறகு, வீட்டில் நான் இலக்கியம் படிப்பேன் என்று நினைத்தார்கள். ஆனால் பொருளாதாரம் படிக்கப் போகிறேன் என்றவுடன் வியந்து போனார்கள்.

கல்லூரி கொஞ்சம் கண்டிப்பானது. ஆனாலும் கட்டடித்து, மேட்னி ஷோ போகும் தில் பார்ட்டிகள் நிறைய உண்டு. வெளியே போவதென்றால் எச்.ஓ.டி.யிடம் துண்டுச் சீட்டில் எழுதி வாங்கிக்கொண்டு வந்து நேப்பாள வாட்ச்மேனிடம் கொடுக்க வேண்டும். அப்போதுதான் அவர் வெளியே விடுவார். அவருக்கு எந்த மொழியும் முழுதாகத் தெரியாது. நாங்கள் துண்டுச் சீட்டில் ஏதேனும் கிறுக்கி, கையெழுத்துப் போட்டு அவரிடம் கொடுப்போம். பின்னர் வெளியே வந்து கேட்டுக்கு இந்தப் பக்கம் நின்றுகொண்டு அவரைப் பார்த்து 'ஓ'வென்று சிரிப்போம். அவர் 'விழித்து'க் கொள்வதற்கு முன்னர் ஜூட் விடுவோம்.

**"எச்.ஓ.டி. போலக் கையெழுத்துப் போட்டு, வாட்ச்மேனை ஏமாற்றிக் கல்லூரியைக் 'கட்' அடித்து இருக்கிறேன்"**

என் கவன... யதார்த்தமாகத்தான் கவிதைகளின் பக்கம் திரும்பியது. வெகுஜனப் பத்திரிகைகளில் தமது கட்டுரைகள் மூலம் கலாப்ரியா, ஞானக்கூத்தன் போன்ற நல்ல கவிஞர்களை அறிமுகப்படுத்தியது எழுத்தாள... சுஜாதாதான். நல்ல கவிதைகளைப் படிக்கப் படிக்க, நமக்கும் கவிதை ஆர்வம் ஊற்றெடுக்கிறது. நாம் படித்த, பார்த்த, அனுபவித்த உணர்வுகளை... கவிதையாக வடித்துவிட வேண்டு... என்று உள்ளுணர்வு உந்தி, ஒ... அவஸ்தையோடு பிறக்கிறது கவிதை. இப்படிப் பிறந்ததுதான் என் 'போட்டி... என்ற முதல் கவிதையும். அது சுபமங்களா இதழில் வெளியாயிற்று. ஊற்றெடுக்கும் கவிதை ஆர்வம் கற்கண்டாய் இனிக்கிறது. எனக்கு முழுமை... யான, ஆத்ம திருப்தி தரும் ஒ...

வாழ்வின் மறக்க முடியாத நாட்கள் பற்றிப் பி...

# அவனிடம் கற்றுக்

அனுபவம் கவிதை எழுதுவதுதான்.

இதுவரை வாழ்ந்த என் வாழ்வில் நான் பொற்காலமாக நினைப்பது 'இந்து'வில் வேலை செய்த காலத்தைத் தான். பல விஷயங்களைக் கற்றுக் கொள்ளும் அரிய வாய்ப்பு 'இந்து'வில் தான் கிடைத்தது.

நல்ல திரைப்படங்களைப் பார்க்க வேண்டும் என்ற ஆவலில் ஃபிலிம் சொசைட்டிகள், கிளப்புகள் என்று தேடித் தேடி, நல்ல படங்களைப் பார்த் தேன். அந்தக் கட்டத்தில் என்னைப் புரட்டிப் போட்டு, எண்ண ஓட்டத் தையே மாற்றிய படம் கிறிஸ்டப் கிஸ் லவுஸ்கியின் 'தி கில்லிஸ்'. மரண தண்டனைக்கு எதிரான கருத்தை வலுவாகச் சொல்லும் படம்.

திருமணத்துக்குப் பிறகு சிங்கப்பூரில் வசித்தபோது தமிழ் முரசு பத்திரி கையில் வேலை கிடைத்தது. அதன் ஆசிரியர் பக்கா பெரியாரிஸ்ட்! ஒரு முறை கோயிலில் தீ மிதிக்கும் நிகழ்ச் சிக்கு என்னை அனுப்பினார். ஆனால் இது போன்ற நம்பிக்கைகளுக்குப் பழக்கப் பட்டுப்போன மக்களையும் காயப்படுத்தாமல், என்னையும் காயப் படுத்தாமல், படங்களை மட்டும் போட்டு, நிகழ்ச்சியை கவர் செய்து விட்டார்.

இப்போது எனது மகன் ஆதித்யா வோடு செலவழிக்கும் ஒவ்வொரு கணமும் மகிழ்ச்சியளிக்கும் விஷயம் தான். அவன் பார்வையே வித்தியாச மாக இருக்கிறது. பல புதிய விஷயங் களை அவனிடமிருந்தும் கற்றுக் கொள்கிறேன்; கற்பேன்.

சந்திப்பு: ப்ரியன்
படம்: ஸ்ரீஹரி



5

கவிதாயினி கனிமொழி

ள் பேசும் பகுதி

கொள்கிறேன்!

# இவர்கள் மீதும் இரக்க காட்டுங்கள்

விலைவாசி றெக்கை கட்டிக்கொண்டு பறக்கும் இந்தக் காலத்தில், காலைச் சிற்றுண்டி, மதிய மற்றும் இரவு உணவு வகை, இவையனைத்தையும் ஏழு ரூபாய் ஐம்பது பைசாவுக்குள் அடக்கிவிட முடியுமா? 'ஓ... முடியுமே!' என்கிறது அரசு. இளங்குற்றவாளிகளின் சீர்திருத்த இல்லங்களில் இருக்கும் சிறுவர்களுக்கு சாப்பாட்டுச் செலவுக்காக அரசு அனுமதிக்கும் தொகை ஏழு ரூபாய் ஐம்பது பைசா மட்டும்தான். இந்த நிலையில் அவர்களுக்குக் கொடுக்கப்படும் உணவின் தரத்தை நாம் எளிதில் புரிந்துகொள்ள முடியும். இந்த பகீர்த் தகவலை அளித்திருப்பவர் நீதியரசர் ஜோதிமணி. மதுரையிலுள்ள சீர்திருத்த இல்லத்துக்கு அதிரடி விசிட்டடித்த நீதியரசர், மேலும் பல அதிர்ச்சித் தகவல்களையும், உயர்நீதிமன்றத்துக்கு அளித்த தமது அறிக்கையில் சொல்லியிருக்கிறார்.

'சமையல் அறையைப் பார்த்தால் சாப்பிடும் எண்ணமே வராது. வெள்ளையடித்து ஒரு வெள்ளிவிழா ஆகியிருக்கும். பாத்திரங்கள் ஓட்டையாகவும், நசுங்கியும் உள்ளன. ஆங்காங்கே சாக்கடை நீர் வழிந்து ஓடிக்கொண்டிருக்கிறது. எந்த அறையிலும் சரியான விளக்கு வெளிச்சம் கிடையாது. குறைந்த வாட் மின் பல்பு பொருத்தியிருக்கிறார்கள். அதுவும் சில அறைகளில் இல்லை. மின் விசிறி கிடையவே கிடையாது. படுக்க பாய், தலையணை கிடையாது. கொடுக்கப்பட்டிருக்கும் பெட்ஷீட்டும் நைந்தும், கிழிந்தும் போயிருக்கின்றன. இத்தனைக்கும் ஐந்து வருடத்துக்கு ஒருமுறை அவர்களுக்கு பெட்ஷீட் கொடுக்க வேண்டும்.

அவர்களுக்கு எந்தவிதமான மருத்துவ வசதியும் செய்து கொடுப்பது கிடையாது. கழிப்பிடங்களைப் பார்த்தால் குமட்டிக்கொண்டு வருகிறது. சுத்தம் என்றால் கிலோ என்ன விலை என்று கேட்பார்கள் போலிருக்கிறது. கழிப்பிடங்களுக்குக் கதவுகள் கிடையாது. மொத்தத்தில் அடிப்படை வசதிகள் ஏதுமின்றி சுகாதாரச் சீர்கேடுகளோடு ஆடு மாடுகளை அடைப்பது போல் அடைத்து வைத்திருக்கிறார்கள்' என்று சொல்லாமல் சொல்கிறது நீதியரசரின் அறிக்கை. பதினெட்டு வயது வரை இதைப் போன்ற இல்லங்களில்தான் குற்றவாளிகள் அடைக்கப்பட வேண்டும். அறிந்தும் அறியாமல் இளம் வயதில் செய்த குற்றங்களுக்காக இது போன்ற இல்லங்களில் அடைக்கப்படும் சிறுவர்களின் மறுவாழ்வு மற்றும் எதிர்காலத்தை கணக்கில் எடுத்துக்கொண்டு அவர்களுக்குக் கல்வி மற்றும் தொழிற்பயிற்சி அளிக்கப்பட வேண்டும் என்கிறது சட்டம். ஆனால் எந்த இல்லங்களிலும் அதுபோன்ற வசதி இல்லையாம். இந்த இளங்குற்றவாளிகள் நீதிமன்ற உத்தரவின் பேரில் அடைக்கப்பட்டிருப்பதால், இவர்களின் நலனை கவனிக்கும் பொறுப்பு மாவட்ட நீதி நிர்வாகத்திடம்தான் இருக்கிறது. பொதுமக்கள் யாரும் எளிதில் உள்ளே நுழைந்துவிட முடியாது. எனவே இதுபோன்ற இல்லங்களில் நிலவும் மோசமான சூழல் வெளியில் தெரிவதற்கான வாய்ப்பு மிகவும் குறைவு. மாவட்ட செஷன்ஸ் நீதிபதிகள் அடிக்கடி விசிட் செய்து வந்தால், விடுதி வார்டன்களுக்கும் ஒரு பயம் இருக்கும்.

இந்த இளங்குற்றவாளிகளை விசாரித்துத் தீர்ப்பு வழங்க நீதி வாரியம் ஒன்றும் இருக்கிறது.

ஆனால் அது அடிக்கடி கூடித் தீர்ப்பு கூறாததால், பல இளங்குற்றவாளி

கள் காலங்கடந்தும் இந்த இல்லங்களில் வாடிக்கொண்டிருக்கிறார்கள்.



நீதியரசர் ஜோதிமணியின் அறிக்கையை ரிட்டாக எடுத்து விசாரித்த தலைமை நீதிபதிகள் ஷா மற்றும் சந்துரு ஆகியோர், அதிரடியாக சில உத்தரவுகளைப் போட்டிருக்கிறார்கள். "உடனடியாக சாப்பாட்டுச் செலவு தலை ஒன்றுக்கு 15 ரூபாயாக உயர்த்தப்பட வேண்டும். மருத்துவர்கள் சோதனை செய்ய வேண்டும்; சிறுவர்களின் மன அழுத்தத்தைக் குறைக்கும் வகையில் அவர்களை மாதத்துக்கு ஒருமுறை சுற்றுலா அழைத்துப் போக வேண்டும்; காது கேட்காத சிறுவர்களுக்குக் கருவிகள் வழங்க வேண்டும்" என்றெல்லாம் கூறியுள்ள நீதிபதிகள், ஓய்வு பெற்ற உயர் நீதிமன்ற நீதிபதி பாலசுப்பிரமணியத்தின் தலைமையில் ஒரு கமிட்டியை அமைத்து, தமிழகத்தில் உள்ள இது போன்ற 22 இல்லங்களை ஆய்வுசெய்து அறிக்கை தரச் சொல்லியிருக்கிறார்கள். மூன்று மாதத்தில் அறிக்கை சமர்ப்பிக்கப்பட வேண்டும். யார் கண்டது, அந்த அறிக்கை மேலும் பல அதிர்ச்சிகளை அளிக்கக்கூடும்!

**"இது போன்ற இல்லங்களில் நிலவும் மோசமான சூழ்நிலைகள் வெளியில் தெரிவதற்கான வாய்ப்பு மிகவும் குறைவு"**

கொடுங்குற்றவாளிகளுக்கே 'மரண தண்டனை கூடாது' என்று மனிதநேயத்தோடு வாதிடப்படும் இன்றைய நாளில், திருந்தி நல்ல மனிதனாக வாழ வாய்ப்பு இருக்கும் இவர்கள் மீதும் அரசு இரக்கம் காட்ட வேண்டாமா?

- ஸ்ரீநி

# அம்புலி அமுது!



## வட்டமேஜை

உணவு வகைகளில் நமக்குப் 'பிடித்தது... பிடிக்காதது' என்பதைவிட, நம் உடலுக்கு 'நல்லது-நல்லதன்று' என்பதை இனம் கண்டு நாம் உண்டு வர வேண்டும் என்று சுகி.சிவம் கூறியிருப்பது வரவேற்கத்தக்கது.

**- ஆர்.அருணாஸ்ரீ, சிதம்பரம்**

விஷ்ணு தரிசனம் கிட்டிடச் செய்யும் பேயாழ்வாரின் பாசுரத்துக்கு, தாய், சேய்க்கு அம்புலி காட்டி அமுதூட்டுவதைப் போல் பொருள் தந்துள்ளார், சுஜாதா!

**- எஸ்.ஏ. கேசவன், கு.கழுகாசாலபுரம்**

தாழ்த்தப்பட்டோர் நலனில் நமது அரசியல்வாதிகளுக்கு நிஜ அக்கறை இருந்திருக்குமானால், இந்த 59 ஆண்டுகளில் அந்தப் பிரிவு மக்கள் எல்லோரும் முன்னேறியிருப்பர். அரசியல் நடத்துவதற்காக மட்டும் அவர்கள் மேல் கரிசனம் கொள்வதைப் போன்ற வியாக்யானங்கள், பலன் தராது!

**- ஆர்.பிரகாஷ், பொன்மலை**

ஆன்மிகம், மதம், தியானம், லிங்கம், தேர்தல் என்ற எல்லாப் பொருள்களிலும் தம் தனிப்பட்ட எண்ணங்களைத் தெரிவித்துவிட்டார் ஜகி வாசுதேவ்.

**- குவளை எழில், சென்னை**

'அது குறித்து நான் எதுவும் சொல்ல விரும்பவில்லை, என்ற சரத்குமாரின் பதில் சிறப்பாக இருந்தது.

**- ஆர்.குமாரசுப்ரமணியன், நாகர்கோவில்**

'மிஸ்டர் கருணாநிதி ஐ.பி.எஸ்.' கார்ட்டூன் அபாரம்! கவிச்சக்கரவர்த்தி கற்பனை போன்றது. கார்ட்டூன் சக்கரவர்த்தி 'கொம்ப'னாகி விட்டது கல்கி!

**- ஆர்.கோபாலன், சென்னை**

இந்த இதழின் 20-ஆம் பக்கத்தில் வெளியாகியுள்ள **'வளைஞ்ச மூக்கு... திமிரு பார்வை!'** சிறுகதையை எழுதியவர் பொன்மலை பிரகாஷ்.

கல்கி தீபாவளி மலரைப் பிரித்ததும் கண்களில் முதலில் பட்ட குருநாதர் பரமாச் சார்யாரின் புகைப்படம் மிகவும் அருமை. ஆண்டாளின் உணர்ச்சிகளையெல் லாம் அவரது முகபாவத்திலேயே அள்ளிக் கொட்டி விட்டார் விசாகா ஹரி.

தியாகத்திலே தன் முகத்திரையைத் தானே முழுவதுமாகக் கிழித்தெறிந்துவிட்டு ரோஸலினுக்கும், மைக்குக்கும், தாயாக மாறி யிருந்தாளே கங்கா... கதையின் ஆசிரியர் நிமிர்ந்து நிற்கிறார். 'என்னிடமிருந்து என் னைக் காப்பாற்றினார்' என்ற வரி வலிமை மிக்கது. 'கட்டுடைக்கும் தீபாவளி'யில் மதுமிதாவின் பூகம்ப வரிகள் பொய்ம்மையை விழுங்கிய உண்மையின் உத்வேகம்.

- மதிஒளி,
சென்னை-18

2006 கல்கி தீபாவளி மலர் 'அன்புச் சிறையில் ஆனந்த விட்டலன்' அற்புத தரிசனத்தோடு தொடங்குகிறது. சென்னை உயர்நீதிமன்றத்தை சுற்றியுள்ள பகுதிகளை பற்றிய வர்ணனை மிகவும் அற்புதம்!

மூதறிஞர் இராஜாஜியின் 'வெப்பத்திலும் தண்மை' கட்டுரையை மீண்டும் படிக்கும் வாய்ப்புக் கிடைத்தது சுகம்.

'ரசிகமணி ரசித்த மாந்தர்' என்ற தலைப்பில் குற்றால முனிவர் டி.கே.சி. கலை, இலக்கியம், அரசியல் பிரமுகர் களோடு பழகிய விவரங்களைப் படிக்கும் போது மனதுக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது.

மொத்தத்தில்... கலைவாணியின், திருப்பாத கமலங்களுக்கு அர்ச்சிக்கப்பட வேண்டிய பொன் மலர்!

- ச.ஆறுமுகம்,
சென்னை



# ப்ரிஸ்கிரிப்ஷன்

**கர்ப்பப்பை அறுவை சிகிச்சைக்கு லேப்ரோஸ்கோபிக் முறை சிறந்ததா? இதனால் பின்விளைவுகள் ஏற்படாதா?**

- சி. புஷ்பலதா, திருச்சி



• டாக்டர் ராஜ்குமார்

**டாக்டர் ராஜ்குமார் (வயிற்று அறுவை சிகிச்சை நிபுணர்):**

கர்ப்பப்பையில் கட்டி இருந்தாலோ அல்லது வேறு ஏதாவது காரணங்களால் கர்ப்பப்பையை அகற்ற வேண்டும் என்றாலோ நவீன அறுவை சிகிச்சையான 'லேப்ரோஸ்கோபிக்' முறைதான் சிறந்தது. சிறுநீரகம், மண்ணீரல், சிறுகுடல் என எந்தப் பகுதியில் கட்டி ஏற்பட்டாலும் இந்த அறுவை சிகிச்சைதான் நல்லது. இதில் பெரும்பாலும் உள்நோக்கி அறுவை சிகிச்சை எனப்படும் 'Laparoscopic Hysterectomy' மூலம் இரத்தக் கசிவு ஏற்படாமல் இரத்தத்தை உறையச் செய்து, மூன்று குழாய்களில் ஒரு குழாயின் வழியாகப் பார்த்து, மற்ற இரண்டின் வழியாக அறுவை சிகிச்சையை செய்கிறோம். இந்த முறையில் வஜைனா வழியாகவும், 'MORCELLATOR' என்கிற கருவியைக் கொண்டும் கர்ப்பப்பை அகற்றலாம். ஆனால் கர்ப்பப்பையில் புற்றுநோய் உள்ளவர்களுக்கு மட்டும் லேப்ரோஸ்கோபிக் செய்யும்போது கவனம் தேவை. இந்த அறுவை சிகிச்சையால் எந்தப் பின்விளைவும் ஏற்படாது. அறுவை சிகிச்சை செய்த ஒரு நாள் கழித்து உங்களுடைய அன்றாடப் பணிகளைத் தொடரலாம்.

• டாக்டர் ஜெயராணி

**அடுத்த மாதம் எனக்குத் திருமணம். எனக்கு ஆலோசனை தேவைப்படுகிறது. இதற்கு இப்போது மையங்கள் இருக்கின்றனவாமே... அங்கு என்ன சொல்லித் தருவார்கள்?**

- ஆர். ரமா, புது வண்ணை

**டாக்டர் ஜெயராணி (இந்தியன் இன்ஸ்டிடியூட் ஆஃப் செக்ஸுவல் மெடிசன் அண்ட் ப்ரீ மேரிடல் கவுன்சிலிங் மைய இயக்குநர்):**

திருமணத்துக்கு முன்பு ஆணும் பெண்ணும் இல்லற வாழ்வைப் பற்றிப் புரிந்துகொள்ள வேண்டும். அதுதான் மகிழ்ச்சியான வாழ்க்கைக்கு அஸ்திவாரமாக அமையும். இதற்கென இப்போது தகுந்த மருத்துவர்களால் மையங்கள் அமைக்கப்பட்டு, ஆலோசனைகள் அளிக்கப்படுகின்றன. இந்த ஆலோசனைகள், தாம்பத்ய வாழ்க்கை, குழந்தைப் பேறைத் திட்டமிடல், உடல் உறுப்புகளைப் பற்றிய விழிப்புணர்வு, பாலியல் குறித்த முறையான அறிவியல்பூர்வ விளக்கங்கள், தவறான அச்சத்தைப் போக்குதல் போன்றவற்றின் அடிப்படையில் அமையும். ஆண்களுக்கு ஆண் மருத்துவரும், பெண்களுக்குப் பெண் மருத்துவரும் தகுந்த பயிற்சியளிப்பர். நாகரிக வளர்ச்சியினால் இன்றைக்குப் பல பிரச்னைகளால் உந்தப்பட்டு விவாகரத்துகள் பெருகிவிட்டன. இவற்றைத் தடுப்பதற்கு இதுபோன்ற மையங்களின் வழிகாட்டுதல்கள் இன்றியமையாதவை. நீங்களும் ஆலோசனை பெறலாம்; மகிழ்ச்சியாக வாழலாம்.

• டாக்டர் வாசுதேவன்



**சர்க்கரை நோய் சிகிச்சைக்கு நாவற்பழம் உதவும் என்பது உண்மையா? எப்படி சிகிச்சையளிக்கப்படுகிறது?**

- குஞ்சிதபாதம், சிதம்பரம்

# திருமணத்துக்கு கவுன்செலிங்கா?



வாசுதேவன்

(சித்த மருத்துவ நிபுணர்):

**நா**வற்பழம் சர்க்கரை நோய்க்கு நல்ல தீர்வாக அமையும் என்பது உண்மைதான். நாவற்பழக் கொட்டைகளை வெயிலில் நன்றாகக் காய வைத்து, ஈரப்பதம் முழுவதும் அகன்று சுக்குப்போல் ஆனவுடன், கல் உரலில் போட்டு நன்றாக இடித்துக் கொள்ளவும். இடித்ததைப் பொடியாக வரும்வரை திரும்பத் திரும்பப் போட்டு இடிக்கவும். பிறகு சல்லடையில் சலித்து இடிபடாமல் இருப்பதை மீண்டும் மூக்குப் பொடிபோல் இடிக்கவும். பிறகு அதைச் சுத்தமாக சலித்து, தனியே எடுத்து வைக்கவும். 'சிறுகுறிஞ்சாலை' என்று சொல்லப்படுகின்ற இலையை வெயிலில் நன்றாகக் காய வைத்துச் சருகுபோல் ஆனவுடன் கல் உரலில் போட்டு இடித்து, மாவுச் சல்லடை ஒன்றில் போட்டுச் சலித்து எடுத்து வைத்துக் கொள்ளவும். இப்போது இரண்டு வகையான தூளில் இருந்தும் வகைக்கு ஐந்து ரூபாய் எடை அளவு எடுத்துக்கொள்ளவும். இரண்டையும் நன்றாகக் கலந்து மீண்டும் அவற்றை மாவு சலிக்கும் சல்லடையில் சலித்துக் கொள்ளவும். இந்தக் கலவையை வாய் அகலமான ஒரு கண்ணாடிப் புட்டிக்குள் போட்டு பத்திரப்படுத்தி கொள்ளவும். இந்தப் பொடியை நாற்பது நாட்களுக்குக் காலையில் ஒரு தேக்கரண்டி, மாலையில் ஒரு தேக்கரண்டி என வாயில் போட்டு, சிறிதளவு வெந்நீர் குடிக்க வேண்டும். இந்த மருந்து சர்க்கரை வியாதிக்கு நல்ல தீர்வாக அமையும்.

தொகுப்பு: **ம.மனோ**

படங்கள்: **பொள்ளாச்சி சுந்தரம்**





கல்கி

2006 நவம்பர் 19
விய கார்த்திகை 3
மலர் : 65
இதழ் : 16

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

# இலஞ்ச - ஊழலுக்கு 'சீல்' வையுங்கள்!

பட்டவர்த்தனமாக விதிகளை மீறி, கட்டடம் எழுப்பப் படுகிறபோதும், குடியிருப்புப் பகுதிகளிலோ வேறு தடை செய்யப்பட்ட பகுதியிலோ அனுமதியின்றி கடைகள் எழும்போதும் உள்ளாட்சி / நகராட்சி அமைப்புகள் கண்டுகொள்வதில்லை. நகர வளர்ச்சி மன்றங்கள் இலட்சியம் செய்வதில்லை.

இவ்வாறு 'கண்டுகொள்ளாமல்' இருப்பதற்காக, அவ்வமைப்பின் ஊழியர்கள் / அதிகாரிகள் இலஞ்சம் பெறுவதும் பின்னர் அக்கடைகளைத் தொடர்ந்து நடத்த அவற்றின் உரிமையாளர்கள் அவ்வப்போது 'மால்' வெட்டுவதும் சகஜமான நடைமுறைகளாகிவிட்டன.

இப்படிப்பட்ட சூழலில், உச்சநீதிமன்றத்தில் யாரேனும் பொதுநல வழக்குத் தொடர்ந்தால், அப்போது ஆரம்பிக்கிறது பிரச்னை! 'வருடக்கணக்காக இந்த இடத்தில் வியாபாரம் செய்து வருகிறோம். எங்களை அப்புறப்படுத்தலாகாது' என வியாபாரிகள் முரண்டு பிடிக்கிறார்கள். அனுபவப் பாத்தியதை கொண்டாடுவதுடன், இவர்கள் அரசு அதிகாரிகளுக்கும் காவல் துறைக்கும் தவறாமல் அளித்து வந்த இலஞ்சமும் கூட தங்களுடைய 'தார்மிக உரிமை'க்கு அடிப்படை என நம்பவே ஆரம்பித்துவிடுகிறார்கள்! சட்டம் என்பதாக ஒன்று இருப்பதை, அதனை அமல்படுத்த வேண்டிய அதிகாரிகளும் போலீஸுமே அடியோடு புறக்கணிக்கிறபோது, சராசரி மக்கள் துணிவுகொண்டு தப்பு செய்வதில் ஆச்சர்யம் என்ன...? அந்தத் தப்பே சரி என்று அவர்கள் வாதாடுவதில் அதிசயம் என்ன?

அதிகாரிகளும் காவல்துறையும் ஏன் இந்த விஷயத்தில் பலவீனமாகி வளைந்து கொடுக்கிறார்கள் என்று பார்த்தால், பணம் பண்ணுவதையே குறிக்கோளாகக் கொண்ட அரசியல்






வாதிகள்தான் அவர்களுக்கு வழிகாட்டி! சதாசர்வ காலமும் தங்கள் செல்வாக்கைப் பயன் படுத்தி, அரசியல்வாதிகள் சட்டத்தை மீறுகிறார்கள்; சட்டமீறல்களுக்கான விளைவுகளி லிருந்து இவர்கள் தப்பிக்கவும் செய்கிறார்கள்! இவர்களுடைய அரசியல் செல்வாக்குக்கு அஞ்சி அடிபணிவதில் ஆரம்பிக்கும் அதிகாரிகள், காவல்துறையினரின் போக்கு, இலஞ்ச - ஊழல் சாம்ராஜ்யத்தின் ஓர் அங்கமாகவே வெகு விரைவில் வேரூன்றி, கிளைபரப்பி விடுகிறது.

இத்தனை அவலமும் நடந்த பிறகு, உச்சநீதிமன்றம் தலையிட்டு நீதி நிலைநாட்ட முற்படுகிறபோது, ''சட்டம் - ஒழுங்கு பிரச்னை வெடிக்கும்; ஆகவே உச்சநீதிமன்ற ஆணையை நடைமுறைப்படுத்த முடியாது''என்று அரசே அஞ்சுகிறது! சட்டத்தையும் ஒழுங்கையும் லஞ்ச - ஊழலுக்குக் காவு கொடுத்துவிட்ட பிறகு, சட்டம் - ஒழுங்கு பிரச்னையையே காரணம் காட்டும் இந்த முரண்பாட்டை என்னவென்று சொல்வது!

தலைநகரில் ஏற்பட்டுள்ள இந்த நெருக்கடி காரணமாக, பல்லாயிரம் மக்களின் அன்றாட வாழ்க்கை பாதிக்கப்படும் என்பது உண்மையே. ஆனால், அதற்காக உச்சநீதி மன்ற ஆணையை மறுப்பதோ, கேள்விக்குட்படுத்துவதோ சரியல்ல.

ஆட்சி மன்றத்தினர் சட்டத்தை மீறி செயல்பட்டாலோ அதிகாரிகள் தவறிழைத்தாலோ தட்டிக் கேட்டு மக்களுக்கு நீதி கிடைக்கச் செய்ய வேண்டும் என்பதற்காகத்தான் நமது அரசியல் சாசனம் நீதித்துறைக்குத் தனி அதிகாரம் அளித்திருக்கிறது. இவ்விரு துறை களும் புறையோடிப் போனதுடன் நீதித் துறையின் தீர்ப்புகளையும் கட்டளைகளையும் மீறவும் ஆரம்பித்தால், வெகு விரைவில் நம் நாடெங்கும் அராஜகம் தலைவிரித்தாட ஆரம்பிக்கும்.

எத்தனை செலவானாலும், புது டெல்லி வியாபாரிகள் கேட்கும் நஷ்ட ஈட்டைக் கொடுத்து அவர்களைச் சுமுகமாக அப்புறப்படுத்த, டெல்லி முனிசிபல் கார்பரேஷன் பொறுப்புடன் இயங்க வேண்டும். தவறுக்குத் துணைபோனபின், அதற்கான விளைவு களையும் சந்திப்பது தவிர வேறு வழியில்லை!

கடைகளுக்கு 'சீல்' வைப்பதுடன் லஞ்ச - ஊழலுக்கும் சீல் வைத்தால் இப்பிரச்னை மீண்டும் தலை தூக்காது.

புதுடெல்லியில் பெரிய அளவில் இன்று வெடித்துள்ள பிரச்னை, எல்லா நகராட்சி மன்றங்களுக்கும் எச்சரிக்கையாக அமையட்டும். ❍

# என் கடவுள்...என் தோழன்!

நான் என்பதைப் பற்றித்தான் இப்போது உங்களிடம் பேசப் போகிறேன். அதற்கு முன் கடந்த வாரம் பேசியது குறித்துச் சில வார்த்தைகள்... உணர்வு தரும் சுகத்தில் நீங்கள் மூழ்கி விட்டால், அது உணரும் திறனின் தவறன்று; உணரப்படும் பொருளின் குற்றமுமன்று; எண்ணங்களின் தவறுமன்று. உணர்தலுக்கும் உணரப்படும் பொருட்களுக்கும் நம்மை அறிமுகப்படுத்தும் 'நான்' என்பதன் தவறுதான் அது. எண்ணங்கள் மிக அவசியமானவை. எண்ணங்களின்றி வாழ முடியுமா? உணர்வோடு வாழ்வது, உங்களது இயல்பு. அதை வேறு எவரும் உங்களுக்குக் கொடுக்க முடியாது.

நான் எப்படிக் கடினமானதாக இருக்க முடியும்? நீங்கள் எப்போதும் உங்களுடன் தான் இருக்கிறீர்கள். ஆனால், இது மிகக் கடினமான விஷயம் என்ற கருத்தை நம் மீது திணித்துவிட்டார்கள். ஆத்ம ஞானத்தை விட சுலபமானது வேறெதுவும் இல்லை. ஏனெனில், உங்களுக்குப் பிடிக்கிறதோ இல்லையோ, அது எப்போதும் இருக்கத்தான் செய்கிறது. புலனுணர்வு என்பது இரண்டாம் நிலை. ஆனால் உணர்வோடு இருப்பதென்பது அடிப்படையான ஒன்று.

இந்தப் பொருளை உங்கள் கண்களால் பார்க்கிறீர்கள். இவற்றில் எதில் உங்களை இழக்கிறீர்கள் - இந்தப் பொருளிலா அல்லது உங்கள் பார்வை தரும் உணர்விலா? "நீங்கள் பார்க்கும் பொருட்கள் எல்லாவற்றையும் என்னிடம் கொடுங்கள்; அல்லது உங்கள் கண்களைத் தந்துவிடுங்கள்" என்று நான் கேட்டால், "என் கண்களை எடுத்துக் கொண்டு, நான் பார்ப்பவற்றை விட்டு விடுங்கள்" என்றா சொல்வீர்கள்? "நான் பார்க்கும் எல்லாவற்றையும் எடுத்துக்கொள்ளுங்கள். என் கண்கள் விலை மதிக்க முடியாதவை" என்றுதான் கூறுவீர்கள். வாழ்வில் நாம் எதில் நம்மைத் தொலைக்கிறோம்? நிச்சயம் கண்களில் அல்ல... கண்களில் படும் பொருட்களில்தான் என்று நம்புகிறோம். உங்களது எண்ணங்கள் முக்கியமானவையா, அல்லது 'நீங்கள்' முக்கியமானவரா எண்ணங்களை இழந்துவிடலாம். நீங்கள் நீங்களாக இருப்பதை இழக்க முடியுமா? எதைப் பற்றிய உணர்வுடன் நீங்கள் இருக்கிறீர்களோ, அது மிக முக்கியமானதாக ஆகிவிட்டது.

மனத்தில் எண்ணமாகப் பதிந்து போகாமல் எந்தப் பொருளும் உங்களை அலைக்கழிக்க முடியாது. எண்ணங்களுக்குத் தேவையற்ற முக்கியத்துவத்தைக் கொடுப்பதால், கற்பிப்பதே வேதனையான விஷயமாகி விட்டது. எண்ணங்கள் உபயோகப்படுத்தப்பட வேண்டியவை. அடக்குமுறைப் பிரயோகத்துக்காக அல்ல. நீங்கள் யாராக இருக்க விரும்புகிறீர்கள்...?

சிறந்த சிந்தனையாளராகவா அல்லது எண்ணங்களைத் தொலைத்த மந்த புத்திக்காரராகவா? ஆன்மிகம் என்பதென்ன? உங்கள் சிந்தனையில்தான் கோளாறு என்றால், மூச்சை அடக்கி எதைப் பயிற்சி செய்கிறீர்கள்? கால் விரலில் பிரச்னையென்றால், வயிற்றிலா அறுவை சிகிச்சை செய்வார்கள்?

எண்ணம் மட்டுமே சிந்தனை ஆகாது. எண்ணங்களை உபயோகித்தால் மட்டுமே அது 'சிந்தனை' செய்வதாகும். எனவே, வெறும் எண்ணங்களைக் கண்டு ஏன் கவலைப்படுகிறீர்கள்?

"சுவாமிஜி, தியானம் செய்ய உட்கார்ந்தால் எண்ணங்கள் வருகின்றனவே" என்பார்கள் சிலர். வேறென்ன வரும்? வேறென்ன வர வேண்டும் என்கிறீர்கள்? 'நெடுஞ்சாலையில் போகும்போது வண்டி

**சுவாமி சுத்தானந்தா**

# எண்ணங்கள் எதிரிகள் அல்ல!



3

நீங்க யாராக
விரும்புகிறீர்கள்?
சிறந்த
சிந்தனை
யாளராகவா...
மந்த புத்திக்
காரராகவா?

கள் வருகின்றன' என்று சொல்கிற மாதிரி இருக்கிறது இது.

சிந்தனை செய்வதைக் குறித்து நமக்குத் தவறாக வழி காட்டப்பட்டுள்ளது. அப்பாவி எண்ணங்களை நாமே எதிரிகளாக மாற்றி வந்திருக்கிறோம். பொருட்களைத் தியாகம் செய்ய வேண்டும்; உணர்வதை விட்டு விலக வேண்டும் என்றெல்லாம் நம்மிடம் கூறப்பட்டுள்ளது. நீங்கள் எதையுமே விட்டு விலக முடியாது; விடவும் தேவையில்லை. உடலை உபயோகிக்காதவரை வாழ்க்கை என்பது வாழ்தல் ஆகாது. எண்ணங்களைப் பயன்படுத்தாமல் சிந்திக்க முடியுமா, வாழ்க்கையை வாழ இயலுமா?



''நவீன இலக்கியம் இப்பக் கொஞ்சம் மாறிக்கிட்டு வருது!''

''எப்படிச் சொல்றே?''

''நேத்து நான் படிச்ச நாவலில் புரியற மாதிரி அங்கங்கே சில வரிகள் வந்தது!''

- உ.ராஜாஜி



எண்ணம் என்பது பிரச்னை அன்று. 'நான் யார்' என்று சிந்திக்க நீங்கள் கற்க வேண்டும். தனி நபரிலிருந்துதான் இந்தத் தேடல் துவங்க வேண்டும். நாம் கடவுளைப் பற்றிய குழப்பத்துடன் இருக்கிறோம். நமக்கு நம்மைப் பற்றியே குழப்பம். அதனால் தான் கடவுளைப் பற்றிய குழப்பமும் நம்மை ஆக்ரமித்திருக்கிறது. இந்தக் குழப்பத்தால்தான் நம்முடைய அவ்வப் போதைய மனநிலைமைக்கேற்ப கடவுளைப் பல்வேறு வகைகளில் உருவாக்கவோ, ஏற்கவோ, நிராகரிக்கவோ செய்கிறோம். நமக்குப் பிரச்னை ஏற்படும்போது, உதவக்கூடிய கடவுளைப் பிடிக்கிறது. சந்தோஷமாக இருக்கும்போது, 'கடவுள் எங்கும் நிறைந்தவர். நான் ஏன கவலைப்பட வேண்டும்?' என்கிறோம். இக்கட்டான நிலைமையாக இருந்தால், 'கடவுள் மட்டுமே உதவ முடியும்' என்று சொல்வோம்.

நாத்திகன் ஒருவன் கடலில் குளிக்கும் போது, பெரிய வெள்ளை சுறாமீனைக் காண்கிறான். கூர்மையான பற்களோடு தன் வாயை அகலமாகத் திறந்தபடி சுறாமீன் அவனைத் தின்னத் தயாராக நெருங்கி வரத் துவங்குகிறது. யாரை உதவிக்கு அழைப்பது என்று அவனுக்குப் புரிவதில்லை. ''கடவுளே, என்னைக் காப்பாற்று'' என்று அலறுகிறான். மின்னல் போல எதிரே தோன்றும் கடவுள், சுறாமீனைக் கொன்றுவிட்டு, "நீதான் என்னிடம் நம்பிக்கை இல்லாதவனாயிற்றே, பிறகு ஏன் என்னை அழைத்தாய்?'' என்று கேட்கிறார்.

அவன் சற்றே புத்திசாலி... "உன்னிடம் எனக்கு நம்பிக்கையில்லை என்பது உண்மைதான்... ஆனால், நீ சுறாமீனுக்கு நம்பிக்கை ஏற்படுத்தியிருக்கலாமே!'' என்கிறான். கடவுள் மறைந்ததும் திடீரென்று சுறாமீன் மறுபடி தோன்றுகிறது... அதிசயம்தான். "கடவுளே, நான் சாப்பிட உணவு தந்ததற்காக உனக்கு நன்றி'' என்று சுறாமீன் நன்றி கூறுவது அவன் காதில் விழுகிறது. சுறாமீனுக்குப் பக்தி வந்துவிட்டதென்றால், பலன் இப்படித்தானே இருக்கும்!

(தொடரும்)

# உங்களில் பலருக்கு

# எஸ்டேட் ஃப்ரெஷ் ஃபில்டர் காபி

## ஒரு மரபாகும்

E/G ESTATE FRESH Coffee

வெகு காலமாக, புதிதாக தயாரிக்கப்பட்ட தரம் வாய்ந்த காபியை உங்கள் விருப்பத்திற்கேற்ற வகையில், உங்கள் ஒவ்வொருவருக்கும் நாங்கள் வழங்கி வருவதை நீங்கள் நன்கறிவீர்கள். மறுக்கவியலாத மற்றும் மிக உயர்ந்த தரத்துடன் எஸ்டேட் ஃப்ரெஷ் ஃபில்டர் காபி உற்பத்தி செய்யப்படுவதால், பலகாலமாக எங்கள் வாடிக்கையாளர்களால் அது பெரிதும் விரும்பப்பட்டு வருகிறது. தரத்தை விரும்பும் எங்கள் வாடிக்கையாளர்களின் வசதிக்காக, அவர்களுக்கு அருகாமையில் உள்ள கடைகளில் எஸ்டேட் ஃப்ரெஷ் ஃபில்டர் காபி கிடைப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. காலம் காலமாக உங்கள் ஆதரவையே எங்கள் நோக்கமாக



கொண்டுள்ள நாங்கள், உங்கள் பகுதி மற்றும் தமிழ்நாடு முழுவதிலும் எங்களது தரம் வாய்ந்த தயாரிப்பான எஸ்டேட் ஃப்ரெஷ் ஃபில்டர் காபியை புதிய எழில்மிகு மற்றும் சிறப்பான பேக்கிங்கில் விநியோகிக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. உங்கள் ஒவ்வொருவரின் நாவின் சுவையை திருப்தி செய்து, நீங்கள் சுவைக்கும் காபியின் மணம் உங்கள் நாவில் நெடுநேரம் நிலைத்திருக்கச் செய்வதெ எங்கள் நோக்கமாகும். எனவே உங்கள் அருகாமையிலுள்ள பலசரக்கு கடைக்குச் சென்று, எஸ்டேட் ஃப்ரெஷ் ஃபில்டர் காபியை கேட்டு வாங்கிப் பருகி, உங்கள் காபியின் விசேஷ மணம் மற்றும் சுவையை அனுபவித்து மகிழுங்கள்.





இதுபோன்ற நிறைவில்லை வேறெந்த காபியிலும்

COFFEE 85% CHICORY 15%







E/G

Estate Foods & Grains

சென்னை மற்றும் தமிழகமெங்கும் வியாபார விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன.

தொடர்பு கொள்ள: Chennai:9841221796, Rest of Tamilnadu: 9486263342

# வளைஞ்ச மூக்கு... திமிரு பார்வை!

விடுமுறைக்குப் பிறகு பழைய மாணவர்களோடும், புதிதாக அடியெடுத்து வைத்திருக்கும் முதலாமாண்டு மாணவ-மாணவியரோடும் களை கட்டியிருந்தது அந்தக் கல்லூரி.

பல வகை வண்ண உடைகளில் பவனி வந்த இளம் பெண்களின் கூட்டம் மலர்ச் சந்தைக்குள் நுழைந்தது போன்ற உணர்வைத் தந்தன.

எவ்வளவு பூ இருந்தாலும் தனியே தெரியும் ரோஜாவைப்போல, அந்தக் கூட்டத்தில் இன்றைய பெண்கள் மறந்தே போய்விட்ட பாவாடை தாவணியில், தன் தாய் மாமன் உடன்வர, சற்றே அஞ்சியபடி வந்து கொண்டிருந்தாள் லாவண்யா.

"தாவணி போட்ட தீபாவளி வந்தது நம்ம கேம்பஸுக்கு" பின்னால் பாடல் வர, திரும்பலாமா வேண்டாமா என்று யோசித்துக் கொண்டிருக்கும்போதே, "ஹலோ புதுப் பொண்ணு... கொஞ்சம் நில்லும்மா" என்று சற்றே அதிகாரத் தொனி குரலைக் கேட்டுத் திரும்பினாள்.

விக்டர்களும் ஹோண்டாக்களும் பரவி நிற்க, அதில் அமர்ந்திருந்தவர்களில் ஒருவன் கையை அசைத்துக் கூப்பிட்டான். அந்த குரூப்பில் பெண்கள் இருவருமிருக்க, தயக்கம் நீங்கிய லாவண்யா, "மாமா கொஞ்சம் நில்லுங்க... நான் போயி என்னன்னு கேட்டுக்கிட்டு வந்திர்றேன்" என்று சென்றாள்.

"என்னையா கூப்பிட்டீங்க?"

"ஆமாம்... ஃபர்ஸ்ட் இயர் பொண்ணா?"

"ம்ம்" என்றாள் மெதுவாக.

"சீனியரையெல்லாம் கண்டுக்காம போற... இனிமே தினம் எங்களுக்கு வணக்கம் வெச்சுட்டுதான் நீ கிளாசுக்குப் போகணும்... புரியுதா?"

"ம்ம்... நான் அப்ப கிளம்பட்டுமா?"

"சரியா போச்சு... கிளம்பறதா? இன்னும் நாங்க ஆரம்பிக்கவே இல்லை..." என்றான் ஒருவன் சிரிப்போடு.

"எதை?" என்றாள் லாவண்யா திகிலாக.

"ராகிங்."

"அதெல்லாம் இப்ப எந்த காலேஜ்லயும் கிடையாதுன்னு சொன்னாங்களே?"

"சொல்றதுதான்; அப்புறம் சத்தம் இல்லாம செய்யறதுதான். இதான் இப்ப இங்க நடைமுறையில இருக்கு. நாவரசு விஷயத்துக்கு அப்புறம் நாங்களும் அடக்கி வாசிக்க ஆரம்பிச்சுட்டோம். அதுனால நீ பயப்படாதே. நாங்க சொல்ற ஒரு சின்ன வேலையை மட்டும் நீ செஞ்சா போதும்."

"சொல்லுங்க... நான் என்ன செய்யணும்?"

"மொதல்ல உன் பேர் சொல்லணும்.."

சொன்னாள்.

"லாவண்யா... அதோ அங்க கட்டம் போட்ட சட்டை போட்டுக்கிட்டு உசரத்துல நம்ம சத்யராஜ் சாருக்குச் சவால்விடற மாதிரி நிக்கிறானே... அவன்கிட்ட போயி நீ சண்டை பிடிக்கணும்."

"சண்டையா... என்னன்னு நான் சண்டை போடறது?"

"கதை, வசனமெல்லாம் நாங்க எழுதித் தர மாட்டோம். எங்களுக்குத் தேவை நீ அங்க போயி சண்டை போடறதுதான்...

சொல்ல மறந்துட்டமே... சண்டை சுமார் அஞ்சு நிமிஷமாவது இருக்கணும். கமான், நேரத்தை வேஸ்ட் செய்யாம போயி ஆரம்பி."



"என்னம்மா சொல்றாங்க. வம்பு இழுக்கறாங்களா? நான் போயி என்னன்னு கேட்கட்டுமா?" என்று ஆரம்பித்த மாமனைச் சமாதானப்படுத்தி, "அவங்க வம்பு பண்ணலை. நான்தான் ஒருத்தனை இப்பப் போயி வம்பு இழுக்கணும்" சொல்லிவிட்டு, மனத்தில் ஒத்திகை பார்த்துக் கொண்டே நடந்தான்.

அவனுக்கு நேரே போய் நின்று இடுப்பில் கை வைத்துக்கொண்டு, ''ஆம்பளைன்னா நீங்க எப்படி வேணும்னாலும் நடந்துக்கலாமா... ஒரு பொண்ணு மனசு என்ன பாடுபடும்னு கொஞ்சம் யோசிக்க வேணாம்... பிடிக்கலைன்னா அதைச் சொல்ல ஒரு முறையில்லையா? காலங்காலமா ஒரு வசனம் வெச்சிருப்பீங்களே 'போயி லெட்டர் போடறோம்'னு அதையே சொல்லியிருக்கலாமே'' - அவனுக்குச் சந்தர்ப்பமே கொடுக்காமல் படபடவெனப் பொரிந்தான். மாமா அவளை வெறித்துப் பார்த்தபடியே நின்றிருக்க, கூட்டம் கூடியது.

"என்ன ஆச்சு... இவன் என்ன செஞ்சான்?"

மனதுக்குள் பொங்கும் சிரிப்பை அடக்கியவாறே, "இதோ இங்க நிக்கிறாரே, இவர் நேத்து என்னைப் பொண்ணு பார்க்க வந்திருந்தார். சொஜ்ஜி, பஜ்ஜி, எல்லாம் சங்கோஜப்படாம வாங்கித் தின்னவர், அப்புறம் கொஞ்சம்கூட அலட்டிக்காம பொண்ணுக்கு மூக்கு வளைஞ்சு இருக்கு.. பிடிக்கலைன்னு சொல்லிட்டார். ஏன் தரகர்கிட்ட ஒண்ணுக்கு ரெண்டா போட்டோ கொடுத்து விட்டமே.. அப்ப தெரியலையா என் மூக்கு நேரா இல்லைன்னு? இப்ப நான் சொல்றேன்... இவரோட கறுப்பு நிறம், திமிரு பார்வை எதுவும் எனக்குப் பிடிக்கலை" ஏற்ற இறக்கங்களுடன் நிஜத்தைப் போலவே அவள் முழங்கிவிட்டுத் திரும்பி நடந்தாள்.

"என்ன, நீங்க சொன்னபடி நான் செஞ்சேனா?" என்றாள் தன்னை அனுப்பியவர்களிடம்.

"என்ன செஞ்ச? நீ மட்டும் சத்தம் போட்டா அதுக்குப் பேர் சண்டையா? அவன் பதிலுக்கு எதுவுமே பேசலையே... அவன் வாயைப் பிடுங்கினாத்தானே அது சண்டையாகும்?"

லாவண்யா யோசித்தாள். அதானே... அவன் ஏன் வாய் மூடி மௌனமாக நின்றிருந்தான்? "நான் இப்ப என்ன செய்யணும்... போய் மீண்டும் சண்டை போடட்டுமா?"

பதில் சொல்ல ஒருத்தன் ஆயத்தமாகையில், அவனை கை நீட்டித் தடுத்துவிட்டு, "என் பேர் மதுமதி.. இங்க பார் லாவண்யா... நீ எவ்வளவுதான் சண்டை போட்டாலும் கிஷோர் - அதான் அவர் பேரு... அவன் பதிலுக்கு உன்கிட்ட சண்டை போட மாட்டான்" என்றாள் ஒருத்தி.

"ஏன்?" லாவண்யா ஆர்வமானாள்.

"ஏன்னா... அவனுக்கு வாய் பேச வராது. போன வருஷம் நடந்த ஒரு விபத்துல ஏற்பட்ட ஷாக்ல அவன் ஊமை ஆயிட்டான்."

"நிஜமாவா? வாய் பேச முடியாத ஒருத்தர்கிட்டயா நான் போயி இப்படி மோசமா நடந்துக்கிட்டேன். எனக்குத் தான் எதுவும் தெரியாது. அவரோடவே படிக்கிற உங்களுக்குத் தெரிய வேணாம். எனக்குச் சுடச்சுட பதில் தரணும்னு எப்படி அவர் தவிச்சிருப்பாரு. தன்னால் பேச முடியலையேன்னு அப்ப அவரு எவ்வளவு ஃபீல் செஞ்சிருப்பாரு. இப்படிப் பண்ணீட்டிங்களே. இனிமே ராகிங்கற பேரால யார் மனசையும் நோகடிச்சு விளையாடாதீங்க. நான் இப்பவே போயி அவர்கிட்ட மன்னிப்பு கேட்டுட்டு வரேன்" புறப்படத் தயாரானாள்.

"மன்னிப்பு... எங்கிட்ட இதுவரைக்கும் யாருமே சொல்லாத வார்த்தை!"

பக்கத்தில் குரல் கேட்டுத் திரும்பினாள். கிஷோர்.

"நீங்க... நீங்க" தடுமாறினாள்.

"நானேதான். நான் ஊமைன்னு உனக்குச் சொல்லப்பட்டதும் ராகிங்ல ஒரு பகுதிதான். சும்மா சொல்லக்கூடாது. நல்லாவே சண்டை போட்டே. நல்ல வேளை இது காலேஜா போச்சு. இதே இது பப்ளிக் ப்ளேசா இருந்திருந்தா தீர விசாரிக்காம மக்கள்கிட்ட எனக்கு தர்ம அடி கிடைச்சிருக்கும்" சிரித்தபடியே சொன்ன கிஷோரைப் புன்னகையுடன் ஏறிட்டாள்.

"அப்ப நான் கிளம்பறேன்" என்று லாவண்யா புறப்பட, "ஒரு நிமிஷம்" என்ற கிஷோர், "நீ சொன்னியே அந்த உன்னோட வளைஞ்ச மூக்கு எனக்குப் பிடிச்சுத்தான் இருக்கு. உன்னைப் பொண்ணு பார்த்தா நான் வேண்டாம்னு சொல்ல மாட்டேன்" என்றான். லாவண்யாவின் முகம் நாணிச் சிவந்தது. ●



"என்னோட ரெண்டாவது பையன் அப்படியே என்னை உரிச்சு வெச்ச மாதிரி இருப்பான்!"

"அடப்பாவமே! முதல் பையனாவது அழகா இருப்பானா..?"

- குட்டி பிரசன்னா



# புத்தக விமர்சனம்





**உதிரும் இலை - யாழினி முனுசாமி, மித்ரா ஆர்ட்ஸ் அண்ட் கிரியேஷன்ஸ், சென்னை - 24. பக்கங்கள் 64. விலை ரூ.35/-**

'முரண் களரி' என்னும் இலக்கிய அமைப்பினை சென்னையில் நடத்திவரும் கவிஞர் யாழினி முனுசாமியின் முதல் கவிதைத் தொகுப்பு. ஆழமும், அழுத்தமும் கொண்ட மொழிநடையில் உறவுகளுக்கிடையே ஏற்படும் சின்னச் சின்ன முரண்களை, வறுமையை, காதலை, மாறிவரும் நவீன சமூகத்தை தமது கவிதைகளில் பதிவு செய்துள்ளார். மனத்துக்கு இதம் தரும் கவிதைகளின் தேர்வாக, பாசாங்கில்லாத உணர்வுகளின் தொகுப்பாக இருப்பது நூலின் சிறப்பு.










**வெற்றியின் விதைகள் - வரலொட்டி ரெங்கசாமி, கவிதா வெளியீடு, சென்னை - 17. விலை ரூ.100/-**

நூலாசிரியர் தாம் கண்ட, கேட்ட, அறிந்தவற்றை அறுபத்தைந்து கட்டுரைகளில் வாழ்வியல் நிகழ்வுகளாக வடித்தெடுத்துள்ளார். 'குடும்பத்தோடு நான் செலவிட வேண்டிய நேரத்தைத் திருடித்தான் இதுவரை எழுத்துப் பணி செய்து வந்திருக்கிறேன்' என்று குறிப்பிட்டு நம் மனதைக் களவாடி விடுகிறார். கண்களையும் கருத்தையும் கவரும் புத்தகம்.

**அசுரப் பிடியில் அழகுக் கொடி - மருதன், கிழக்கு வெளியீடு, சென்னை - 18. விலை ரூ.80/-**

சீனாவின் கட்டுப்பாட்டில் தத்தளித்து ஏங்கிக்கொண்டிருக்கும் திபெத்தின் சுதந்திர ஏக்கத்தினை வெளிப்படுத்தும் அரசியல் சரித்திர நூல். 'ஆதி ஒளியில் இருந்தது' என்று திபெத்தைப் பற்றிச் சொல்லப்படும் புராணக் கதை தொடங்கி, திபெத் மக்களை, அவர்தம் வாழ்வை, சுதந்திர உணர்வை, அவர்கள் அந்நியரால் பெற்ற, பெற்று வரும் இன்னல்களை அருமையாக வடித்துள்ளார் நூலாசிரியர்.

சுதந்திரத் தாகமுள்ளோரின் ஏக்கப் பதிவு.

**- புத்தக நேசன்**

# இதம் தரும் கவிதைகள்!

ஒட்டுமொத்த கிராமமே உறங்கப் போகின்ற இரவு நேரம். ஆரியம்பட்டி கிராமத்தின் மந்தை வெளியில் ஒலி பெருக்கிகள் முழங்குகின்றன.

"அண்ணா... சின்னண்ணா...
என் செல்வநல்லூர் பிறந்தவனே
கட்டிமுத்தே... ரத்தினமே..
என்னைக் கைநழுவ விட்டுடாதே!"

பாட்டுச் சத்தம் கேட்டு மெள்ள மெள்ளத் திரளும் கூட்டத்தைக் கண்டு உற்சாகமாகி சுழன்று பாடியபடி அரங் கேறுகிறது அந்தத் தெருக்கூத்து. இன்ற ளவுகூட இதைப்போன்ற தெருக் கூத்துக் கலைகளுக்கு, தொடர்ந்து ஆதரவு தந்து வருபவர்கள் கிராமத்து மக்கள் தான்!



• நாடகக் குழு

# அரிதாரம் கலைத்தால் பரிதாபம்!

"பெண் கலைஞர்கள் யாரும் எங்க கிட்ட கிடையாது. அதனால எங்கள்ல சில ஆண்களே பெண் வேடமிட்டுக் கூத்துக் கட்டி நடிப்போம். அதற்காகவே மீசையை அப்பப்ப சுத்தமா மழிச் சுக்குவோம். எங்க ஆளுக பெண் வேஷம் கட்டி வந்து நின்னோமின்னா அச்சு அசலா அப்படியே பொம்பளை மாதிரியே இருக்கும்னா பார்த்துக்கங்க!" என்று, விழிகள் விரியப் பேசுகிறார் கீழ ஆரியம்பட்டி, பெரியக்காண்டியம் மன் நாடகக் கலைக் குழுவின் தலை வரான தங்கராசு. வயது அறுபது. கடந்த நாற்பது ஆண்டுகளாகத் தெருக் கூத்தின்போது பொன்னர் - சங்கர் அம்மா தாமரையாக் கவுண்டச்சியாகவும், அந்தச் சகோதரர்களின் தங்கை அருக் காணி தங்காயியாகவும் பெண் வேட மிட்டு நடித்து வருபவர்.



• பெண் வேட தங்கராசு

முகம் முழுவதும் பூசிய மஞ் சளுடன், நீண்ட கூந்தல், பளபளக் கும் பட்டுப் புடைவை, தோடு, மூக்குத்தி, கழுத்து நிறைய நகை களுடன் ஒரு பெண்ணுக்குரிய நளி னத்துடனும், அந்தக் கால ராணி போன்ற கம்பீரத்துடனும் மேடை யில் வந்து தோன்ற, மொத்தக் கூட்டமும் பிரமித்துப் போகிறது.

பொன்னர் - சங்கர், அவர் களது அத்தை மகன் மற்றும் வீரபாகு போன்ற அனைவரும் போர்க்களத்தில் ஒரே நேரத்தில் இறந்து போகின்றனர். அந்த வனாந்திரம் வழி யாகப் பொன்னர் சங்கரின் தங்கை அருக் காணி தங்காயி தலைவிரிகோலமாக அவர்களைத் தேடி வருகையில் பாடி வரும் பாடலானது மிகவும் உணர்ச்சிகர மானதென்று சொல்லப்படுகிறது.

"பொன்னர் - சங்கரைக் குல தெய்வங் களாகக் கொண்ட கிராம மக்களால் இந்தக் கலை வடிவம் இன்னமும் கொஞ் சம் உயிரோடு இருக்கிறது. எங்களுக்குத் தெருக்கூத்தினைத் தவிர வேறு ஒன்றும் தெரியாது. வயிற்றுப் பாட்டுக்கு இது ஒன்று மட்டும் போதாது. அதனால் பக் கத்து கிராமங்களில் இரவு நேரங்களில் கூத்துக்கட்டி ஆடிவிட்டு, பகல் நேரங் களில் விவசாயக் கூலிகளாக, கிடைக்கிற வேலைகளுக்குச் சென்று விடுகிறோம்!" என்கிற இந்தக் கூத்துக் குடும்பம் அரசாங் கத்தை எதிர்பார்த்திருப்பதெல்லாம் ஒரு வீட்டு பட்டாவுக்காகத்தான்.

செய்திச் சித்திரம் :
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# ஒரு பக்கக் கதை



அந்த வயதானவர் எங்களையே கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தார்.

"சேகர், அங்க நிக்கிறாரே அவர் யார்றா?"

"என்னடா, இவரைத் தெரியாது? எங்க ஷூட்டிங் நடந்தாலும் அங்க வந்திடுவாரு. என்ன, சான்ஸ் கேட்கத்தான். விட்றா, நம்ம வேலையைப் பார்ப்போம். ஆர்டிஸ்ட் சீக்வென்ஸ் ரெடி செஞ்சுட்டியா?"

ஆனால், என்னால் சாதாரணமாக எடுத்துக்கொள்ள முடியவில்லை. அவர் பார்த்த பார்வை ஏதோ சொல்லியது. என் பார்வையின் கூர்மையை உணர்ந்ததும் என்னை நோக்கி வந்தார்.

# அந்த ஒரு கேள்வி!

"ஸார், வணக்கம். இன்னிக்கு எனக்கு ஏதாவது ரோல் கிடைக்குமா?"

ஒல்லியான தேகம். முள்ளு முள்ளான தாடி ஒரு வார்த்தைச் சொல்லியது. போட்டிருப்பது நிச்சயம் அவர் சட்டையாக இருக்காது. அன்றைய ஷூட்டிங் ஷெட்யூலைப் புரட்டினேன். அவருக்கு ஏற்ற ரோலைத் தேடியதில்...

இருந்தது. ஆனால் டைரக்டர் அல்லது புரொடக்ஷன் மேனேஜரைக் கேட்காமல் சொல்ல முடியாது.

"கொஞ்சம் வெயிட் பண்ணுங்க. டைரக்டர் வரட்டும்."

போய் தம் பழைய இடத்திலேயே உட்கார்ந்துகொண்டு, வருவோர் போவோரைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

டைரக்டர் வர மணி பத்தாகிவிட்டது. வந்ததும் வராததுமாய் அந்த கேரக்டரைச் சொல்லி, அவரைக் காட்டிக் கேட்டேன். அவரும் கொஞ்சம் யோசித்துவிட்டுச் சரியெனக் கூறி ஃபீல்டுக்குள் போய்விட்டார். மிகுந்த உற்சாகத்தோடு அவரை அழைத்துச் சொன்னேன்.

"நிச்சயமா உண்டா?"

அவர் கேள்வி புதிராக இருந்தது. "ஏன் கேட்கறீங்க. டைரக்டரே ஓ.கே. சொல்லியாச்சு. நிச்சயம் உண்டு."

"அப்ப, நான் டிபன் சாப்பிட்டுக்கலாம் இல்லையா?"

அந்தப் பதிலில் பொதிந்திருந்த அவலம் என்னைச் சங்கடப்படுத்தியது. ●



மெலட்டூர் இரா. நடராஜன்

# கடலோரக் கவிதை

கடல் அலைகளைப் பார்த்துக் கொண்டிருப்பது எவருக்கும் அலுக்காது. இத்தனைக்கும் ஓர் அலைக்கும் அடுத்த அலைக்கும் வித்தியாசமே இல்லாவிட்டாலும் ஒவ்வொன்றும் புதிதாகப் பிறப்பதைப்போலத் தோன்றும். முயன்று முயன்று தோற்றுப்போய்ப் பின்வாங்கும்; சின்னதாகி மறைந்து போவதற்குள் அடுத்த அலை ஆரவாரமாகப் புறப்படும். 'இந்த முறை பார்; நிச்சயம் வெற்றி பெற்று விடுவேன்' என்றுதான் புறப்படும். நம் காலை வந்து தொடுவதற்குள் இன்னோர் அலை வரும். அலையின் வேகத்தைக் குறைத்து இலக்கை எட்டவிடாமல் செய்துவிடும். இந்த நாடகம் இரவு பகலாக வருஷம் முழுவதும் சளைக்காமல் நடக்கும்.

கடலிலிருந்து கிடைக்கும் செய்தி என்ன? முயற்சி செய்துகொண்டே இருந்தால் வெற்றி கிடைக்கும் என்பதா? கடமையைச் செய், பலனை எதிர்பார்க்காதே என்பதா? இல்லையேல் கடலின் வெற்றி அழிவைத் தருவதல்லவா! சுனாமி போன்ற ஆழிப் பேரலையா கடலின் வெற்றி?

திருமழிசை ஆழ்வார் தொண்டைநாட்டைச் சேர்ந்த திருமழிசையில் பிறந்தவர். நிச்சயம் கடற்கரைக்குச் சென்று கடலலைகளைக் கவனித்திருப்பார். அலைகளின் பிறப்பு, முயற்சி, எழுச்சி, வீழ்ச்சி ஆகியவற்றைக் கவனித்திருப்பார். அவருக்கு அவையெல்லாமே பரம்பொருளின் செயல்களாகத் தெரிகின்றன.

தமக்குத்தாமே அலையெழுகிறது. அதுபோல் உனக்குள்ளேயே நாங்கள் அனைவரும் பிறந்து, சிறந்து, உனக்குள்ளேயே அடங்கிப் போகிறோம். எல்லாமே உனக்குள்ளேதான். பிறப்பு, எழுச்சி, அடக்கம் எல்லாமே அவனிடமிருந்து அவனுள்தான் என்னும்போது நம் ஆணவங்கள் எல்லாம் அர்த்தமற்றுப் போகும்.

இனி, ஆழ்வாரின் கடலோரக் கவிதையைப் பார்ப்போம்.

'தன்னுளே திரைத்தெழும்
　　தரங்கவெண் தடங்கடல்
தன்னுளே திரைத்தெழுந்து
　　அடங்குகின்ற தன்மைபோல்
நின்னுளே பிறந்து இறந்து நிற்பவும்
　　திரிபவும்
நின்னுளே அடங்குகின்ற நீர்மை
　　நின்கண் நின்றதே.'

(தரங்கம்-அலை, திரிபவும்-மாறுவதும், நீர்மை-குணம், தன்மை)

தமக்குள்ளே திரண்டு எழுகின்ற அலைகடல், தமக்குள்ளே அடங்கிப் போவதுபோல உயிர்கள் அனைத்தும் உனக்குள்ளே பிறந்து திரிந்து உனக்குள்ளேயே அடங்குகின்ற குணம் உன்னிடத்தில் நிலைத்துள்ளது.

இந்தப் பாசுரம் 'குலங்களாய ஈரிரண்டில் ஒன்றிலும் பிறந்திலேன்' என்று தன்னை அடையாளம் காட்டிக் கொள்ளும் திருமழிசை ஆழ்வாரின் திருச்சந்த விருத்தத்தில் உள்ளது. ஓசைநயமிக்க சந்தக் கவிவிருத்த வடிவில் இயற்றப்பட்ட 120 பாடல்களில் ஒன்றான இந்தப் பாடல், பாட்டுத் திறமைக்கும் பிறந்த குலத்துக்கும் சம்பந்தமில்லை என்பதை நிரூபிக்கிறது. ஆழ்வார்கள் எல்லாக் குலங்களிலும் உள்ளவர்கள்.

இந்த வடிவத்தை இவருக்குப் பின் சிவவாக்கியர் பயன்படுத்தியிருக்கிறார்.

சுஜாதா

(படிக்கலாம்)

# தேவமருந்து

நாதன் வயது முப்பது. அரியதொரு வயிற்றுக் கோளாறு! தினமும் காலையில் வேலைக்குச் செல்லும் முன் இவருக்கு மூன்று - நான்கு முறை வயிற்றுப்போக்கு ஏற்படும். பரிசோதனையில் பெரிய நோய்களின் அறிகுறிகள் எதுவும் இல்லை. இது மனப் பரபரப்பால் விளைந்த நெர்வஸ் டயரியா என்பது புரிந்தது. இவருக்கு என்ன வைத்தியம் செய்யப்பட்டது தெரியுமா? போன வாரம் 'களம்' என்ற மோர்க் குழம்பு செய்முறை அளித்தேன் அல்லவா, அந்தக் களம்தான் மருந்து! அதையே கறிவேப்பிலை, கொத்துமல்லி சற்றுக் கூடுதலாகச் சேர்த்து அளித்தேன். தவிர, கோரைக்கிழங்கு, புங்கு இவற்றால் செய்த முஸ்தா கரஞ்சாதி என்ற கஷாயமும் அளித்து, க்ஷீர பலா தைலத்தை தலையில் தினம் வைக்கச் சொன்னேன். நல்ல பலன் விளைந்தது.

இந்த வகையான வயிற்றுப்போக்குகளை ஆயுர்வேதம், அதிஸாரம் என்று அழைக்கிறது. 'ஸரம்' என்றால் குடலின் அசைவு. அது தேவைக்கு அதிகமாக நிகழும்போது வயிற்றுப்போக்கு விளைகிறது. பெரும்பாலும் அபத்தியமான உணவுமுறையே இதற்குக் காரணம். வெளியில் சாப்பிடுவது, சுகாதாரக் குறைவான, கெட்டுப்போன உணவுகளைத் தவிர, முதல் பத்தியில் சொன்னதைப் போன்ற மனக் காரணங்களும் இதைத் தூண்டலாம். குடலில் ஏற்படும் டி.பி. நோய், கணையக் கோளாறு போன்றவற்றினாலும் அதிஸாரம் விளையும். டைஃபாய்ட் போன்ற நோயினாலும் வரலாம்.



டாக்டர் எல்.மஹாதேவன்

அதிஸாரத்தினால் வயிற்றிலுள்ள அக்னி மந்தமாகி, மேலும் மலக்கோளாறுகளை ஏற்படுத்த, அஜீரணம் - மலச்சிக்கல் - மீண்டும் வயிற்றுப்போக்கு என்றதொரு விஷ வட்டத்துக்குள் சிக்கும் அபாயம் இருக்கிறது. இதை இரிடபிள் பவல் சின்ட்ரோம் எனச் சொல்வர்.

வாத, பித்த, கப அதிஸாரங்களின் அடையாளம் வெவ்வேறு மாதிரி இருக்கும். நோயாளியிடம் விவரமாகக் கேட்டறிந்து சிகிச்சையைப் பொருத்தமாக மாற்றி அளிப்போம்.

அதிஸாரத்துடன் வாந்தியும் சேர்ந்





# 4

# அதிஸார அபாயம்!

தால் மிகுந்த அபாயம். உடலில் நீர் அம்சம் கண்டிப் போய் 'சலைன் ட்ரிப்' ஏற்றுகிற அளவுக்குக் கொண்டுவிடும்.

ஆயுர்வேதம், தீவிர அதிஸாரத்தில் மருந்துகளை முதலில் தவிர்த்து, உடலின் சர்க்கரை - உப்புச் சத்து வெளியேற்றத்தைச் சமன்படுத்த முயற்சி செய்கிறது.

திருநெல்வேலி பகுதியில் மெடிக்கல் ரெப்ரஸென்டேடிவ் பணி செய்யும் முருகனின் குடும்பமோ திருச்சியில். எப்போதும் ஹோட்டல் சாப்பாடுதான். சாப்பிட்டவுடனே கழிவறைக்கு ஓட வேண்டும்! மலத்தில் இரத்தம் - சளி வேறு! சந்தேகமின்றி இது அமீபிக் டிஸன்ட்ரி என்பது புரிந்தது. 'அமீபா' என்ற கிருமி உணவு மூலம் உடலுக்குள் புகுந்து குடலில் தங்கி விடுவதால் விளைவது. அக்கிருமியை இலேசில் வெளியேற்ற முடியாது: ஆனால் மலம் மட்டும் வெளியேறியபடியே இருக்கும்! முழுதும் வெளியேறிய உணர்வு இன்றி மீண்டும் மீண்டும் போகத் தோன்றும். இந்தச் சங்கடங்களுடன் வந்த முருகனுக்கு பாடா கரஞ்சாதி என்ற பாடதாளி, புங்கு வேர் போன்ற மருந்துகளால் செய்யப்பட்ட கஷாயம், வில்வ வேரினால் செய்யப்பட்ட வில்வாதி குளிகை, மோரில் அரைத்த கறிவேப்பிலை - இந்தக் கலவைதான் வைத்தியம். இதற்கு அடுத்த கட்டமாக, புளியாரையில் காய்ச்சப்பட்ட **சார்ங்கேர்யாதி நெய்** எனப்படும் ஒரு வகை வயிற்றுக்கு இதமான நெய்யைக் கொடுத்தேன். இரண்டு மாத சிகிச்சைக்குப் பிறகு அவருக்குப் பூரண நிவாரணம் கிடைத்தது.

அதிஸாரத்தில் மிகவும் அபாயகரமானது இரத்த அதிஸாரம். அல்சரேடிவ் கோலைடிஸ் எனப்படும் குடல் புண் இது. அமெரிக்காவில் இதற்குச் சிகிச்சை பலனளிக்காத நிலையில் என்னிடம் வந்தார் ஒருவர். ஆல், அரசு, அத்தி, இத்தி, இலவம் பிசின், நெய் போன்றவற்றுடன் தேன் சேர்த்து எனிமா சிகிச்சை அளித்தேன். (இதற்கு பிச்சா வஸ்தி என்று பெயர்). நல்ல பலன் இருந்தது.

இலவம்பிசின், வெள்ளாட்டுப்பால் போன்றவை இரத்த வயிற்றுப்போக்குக்குச் சிறந்தவை.



'பலம் தஸ்ய ஹி விட்பலம்' என்று ஒரு வாசகம் உண்டு. மலமே ஒருவனுக்குப் பலம் என்று இதற்குப் பொருள். அதிகமாக மலம் வெளியேறினால் அதைத் தடுத்து நிறுத்த வேண்டும்.

ஆனால் காய்கறிகளையும் பழங்களையும் நிறையச் சாப்பிடுபவர்களுக்கு, பொதுவாகவே ஓரிரு முறைகளுக்கு மேல் மலம் வெளியேறும். இதுகுறித்துக் கவலை வேண்டாம். வலி, சராசரி வெளியேற்றத்தில் மாறுதல்கள் என்று வருகிறபோது மருத்துவரை நாட வேண்டும்.

சராசரியாக மலத்தில் 60 முதல் 90 சதவிகிதம் நீர் காணப்படும். 90 சதவிகிதத்துக்கும் அதிகமாகிறபோது அதை வயிற்றுப்போக்கு என்று அறியலாம்.

**வ**யிற்றுப்போக்கினால் உடல் அசௌகரியம் ஒருபுறமிருக்க, மனக்கஷ்டமும் ஏற்படும். பொது இடங்களில் கழிப்பறை வசதியைத் தேடும் அவதியால் மனக்கஷ்டம்; மிக அதிக வெளியேற்றத்தால் இரத்த அழுத்தம் குறையும்.

சிகிச்சையைத் தொடங்கும் முன் உணவுப் பழக்கம், வாழ்க்கை முறை, அதில் ஏற்பட்ட சமீப மாற்றங்கள் என்னவென்று கேட்டறிந்து நோயை நிர்ணயிக்க முடியும்; சிகிச்சையைத் தீர்மானிக்க முடியும். சில சமயங்களில் 'சிக்மாய்டோஸ்கோபி' என்று ஆசனவாய் மூலம் டியூப் செலுத்தி பரிசோதனை செய்ய வேண்டி வரும்.

அக்னிபலம் குறைவதால் தோஷங்கள் வயிற்றில் ஏற்பட்டு பேதி ஆவதால் லங்கணம் (பட்டினி அல்லது வெறும் நீராகாரம்) இன்றியமையாத சிகிச்சை.

• மிக அதிகமாக பேதி ஆகாதபோதும் ஆரம்ப நிலையிலும் மருந்துகள் கொடாமல் உபவாசத்தையே அறிவுறுத்துவோம்.

• சீரகம், மல்லி, வசம்பு, வில்வப்பிஞ்சு, கோரைக்கிழங்கு, வெட்டி வேர், வாயு விடங்கம், வெட்பாலையரிசி போன்றவற்றைக் கொண்டு கஷாயம்.

• வெட்டிவேர், சுக்கு சேர்த்துக் காய்ச்சிய குடிநீர்.

• அதிகமாக மோர் சேர்த்த உணவு.

• மலத்தை இறுக்க வில்வப்பிஞ்சு, பூலான் கிழங்கு, மாதுளை கொண்டு காய்ச்சிய மோர்க் கஞ்சி

• மாதுளம் பழச்சாறு

இவை அதிஸாரத்துக்கு விரைவில் குணம் தரக்கூடிய எளிய சிகிச்சைகள்.

## அபராஜித களம்

**மி**ளகு, மல்லி, சீரகம், வளையுப்பு, மாதுளம் சாறு, ஓமம் இவற்றைத் தாளித்த மோர் அபராஜித களம் எனப்படும். இது மலத்தைக் கட்டுப்படுத்திப் பசியைத் தூண்டும். வயிற்றுக் கடுப்பை நீக்கும்.

கர்பூரத் தைலத்தைச் சூடாக்கிக் கை-கால்களில் தடவ, அதிஸாரக் களைப்பு நீங்கும்.

பால் சேர்க்காத தேநீரில் சிறிது தேன் விட்டுப் பருகினாலும் வயிற்றுப்போக்கு கட்டுப்படும்.

### தன்வந்தரி டாலர் பரிசுப் போட்டி - 4

இதுவரை வெளியான நான்கு அத்தியாயங்களின் அடிப்படையில் அசத்தலான கேள்விகளை எழுப்புங்கள். தேர்ந்தெடுக்கப்படும் கேள்விகளுக்கு
**டாக்டர் எல்.மஹாதேவன்**
பதில் சொல்வதுடன், தலைசிறந்த கேள்விக்கு தன்வந்தரி டாலரும் இரண்டாம் பரிசாக தேவமருந்து முதல் பாகம் நூலும் அளிப்பார்!

**கடைசி தேதி : 20.11.06**

ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.




சரத்தோட நூறாவது படமாம். ரொம்பவே எதிர்பார்க்க வச்சு ஏமாத்திட்டாங்க. நேர்மையான பத்திரிகையாளன், சமூக விரோதிகளால பந்தாடப்படுறான்; மிகுந்த போராட்டத்துக்குப் பிறகு மீண்டெழறான்னு சுவாரஸ்யமா கதை சொன்னவங்க, நேர்த்தியா சொல்லாம விட்டதுதான் பிரச்னை. பத்திரிகையாளன்னா எப்படியிருக்கணும், சமூகத்தை அவன் எப்படிப் பார்க்கணும், அவனுக்குள்ள பொறுப்புகள் என்னன்னு சரத் தெளிவா படத்துல சொல்றார். அதே நேரத்துல உண்மையை வெளிச்சத்துக்குக் கொண்டு வர, அவர் யூஸ் பண்ற டெக்னிக் எல்லாத்துலயும் மிகப் பழைய வாசனை. எதிரியோட ஹோட்டலுக்குள்ள வேஷம் போட்டுட்டு டான்ஸ் ஆடறது, விஜிலென்ஸ் ஆபீஸருன்னு மந்திரிய பொய் சொல்லி ஏமாத்தறது, காக்கா வலிப்பு வந்தவன் மாதிரி கம்பெனிக்குள்ள நுழைஞ்சு துப்பறியறது எல்லாம் சிரிப்பைத்தான் வரவழைக்குது.

பிடிக்காதவங்கள கஞ்சா கேஸ்ல உள்ள தள்றது, என்கவுன்ட்டர்ல போட்டுத் தள்றதுன்னு சமகால நடப்புகளை அள்ளிவிட்டு படத்துக்கு விறுவிறுப்பு சேர்க்கறது அருமை. போலீஸ் அதிகாரியா வர்ற சீமா பிஸ்வாஸ் சும்மா பின்னியெடுத்திருக்காங்க. படத்துல முதல் மார்க் இவங்களுக்குத்தான். நயன்தாரா ஒப்புக்குச் சப்பாணி. ரிப்போர்ட்டர் வேஷம் சரியாப் பொருந்தல. வடிவேலுவோட காமெடில சரக்கு இல்ல. திரைக்கதை சேரனாம்! நம்ப முடியவில்லை... ல்லை... ல்லை!

'பேனாக்காரன் வருகிறான்' பாட்டு மட்டும்தான் நெஞ்சுல பதியுது. மீதியெல்லாம் காத்துல! பாலாசிங் போன்ற நல்ல நடிகரையெல்லாம் வேஸ்ட் பண்ணியிருக்க வேண்டாம். நடிகர் சரத்குமார் ரசிகர்களை திருப்திப்படுத்தற அளவுக்கு, டைரக்டர் சரத்குமாரால செய்ய முடியல. பெட்டர் லக் நெக்ஸ்ட் டைம்!

- லஜ்ஜாவதி

# உள்ளாட்சித் தேர்தல் ஓட்டு... கருத்துச் சுதந்திரத்துக்கு வேட்டு!

உள்ளாட்சித் தேர்தலின்போது நடந்த வன்முறைகளைப் பற்றிப் பேச சென்னையில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த ஒரு கூட்டத்துக்குக் காவல்துறை அனுமதி கிடைக்காததால், நடத்த முடியாமல் போனது. இச்செயலுக்கு மனித உரிமை மற்றும் கருத்துச் சுதந்திர ஆர்வலர்கள் மத்தியில் கடுமையான ஆட்சேபணை எழுந்துள்ளது. "இதைப்போல நடப்பது இது முதல்முறை இல்லை" என்கிறார் நம்மிடம் பேசிய வழக்கறிஞர் யசோத்வர்தன்.

"அமைதியான முறையில் கூடி மக்கள் தங்கள் கருத்துகளைச் சுதந்திரமாக வெளியிட அனைவருக்கும் உரிமை உண்டு. நமது அரசியல் சட்டம் அமலுக்கு வருவதற்குப் பல்லாண்டுகளுக்கு முன்பாக, ஆங்கிலேய ஆட்சியாளர்களால் 1881ஆம் ஆண்டு, இந்திய மக்களின் கருத்துச் சுதந்திரத்தைத் தடை செய்ய வேண்டும் என்ற நோக்கத்துடன் கொண்டு வரப்பட்டதுதான் மாநகரக் காவல்துறைச் சட்டம். இந்தச் சட்டத்தைக் காட்டி, அரசியல் சாசனம் அளித்துள்ள உரிமைக்குத் தடை போடுவது அரசியல் சாசனத்துக்கே முரணானது.

இந்தியா ஒரு ஜனநாயக நாடு. ஆட்சியில் இருப்பவர்களுக்குச் சாதகமான கருத்துகள் மட்டுமின்றி எதிரான கருத்துகளையும் சுதந்தரமாகச் சொல்ல உரிமை உண்டு. மக்களின் இந்த உரிமையினை மறுப்பது சட்ட விரோதம். இந்த விஷயம் ஆட்சி நாற்காலியில் இல்லாத வரையில் அனைத்து அரசியல் கட்சிகளுக்கும் தெரிந்திருக்கிறது. மாநகர காவல் துறைச் சட்டத்தின் நாற்பத்து ஒன்றாவது பிரிவின்படி அனுமதி மறுக்கப்படும் சமயங்களில், அதை எதிர்த்து கட்சிகள் நீதிமன்றங்களுக்குப் போகின்றன. ஆனால், அவர்கள் ஆட்சிக்கு வந்தால், அதே சட்டப் பிரிவினைக் காட்டி மற்ற கட்சிகள், அமைப்புகளின் நிகழ்ச்சிகளுக்கு அனுமதி தர மறுக்கிறார்கள்.

உதாரணமாக, 2003ஆம் ஆண்டு தி.மு.க., அரசாங்க அலுவலகங்களின் முன்னால் தர்ணா செய்ய அனுமதி கேட்டபோது, அன்றைய ஆளும்கட்சியான அ.தி.மு.க. அனுமதி மறுத்தது. அதனை எதிர்த்து தி.மு.க. சார்பில் ஆற்காடு வீராசாமி கோர்ட்டுக்குப் போனார். இன்று, அதே தி.மு.க. தம்மைப் பற்றிய விமர்சனக் கூட்டத்துக்கு அனுமதி மறுத்திருக்கிறது.

ஒரு கூட்டம் நடத்துகிறபோது சட்டம் ஒழுங்குப் பிரச்னை வரும் என்றால், அதை போலீஸ் தடுக்க வேண்டும்; கூட்டத்துக்குப் பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்ய வேண்டுமேயொழிய கூட்டத்துக்கு அனுமதி மறுக்கக் கூடாது.

சில ஆண்டுகளுக்கு முன்னால், நெடுமாறன் ஒரு கூட்டம் நடத்த அனுமதி கேட்டபோது, அனுமதி மறுத்து 'கூட்டத்தில் தடை செய்யப்பட்ட இயக்கமான விடுதலைப் புலிகளுக்கு ஆதரவாகப் பேசுவார்கள்' என்று போலீஸ் காரணம் கூறியது. விஷயம் கோர்ட்டுக்குப் போனது. 'கூட்டம் நடத்த அனுமதி கேட்டால், இப்படி பேசக்கூடும் என்ற அனுமானத்தின் பேரில் அனுமதி மறுப்பது சரியல்ல. கூட்டத்தில் அப்படி யாராவது பேசினால் நடவடிக்கை எடுக்கச் சட்டத்தில் இடம் இருக்கிறது' என்று கோர்ட் சொல்லிவிட்டது. கூடவே 'மாற்றுக் கருத்துகள் எல்லாவற்றையும் தேச விரோதமானவை என்று முத்திரை குத்தி

விடுவதும் தவறு' என்றும் அறிவுறுத்தியது.

இதில் கவனிக்கத்தக்க விஷயம், நிகழ்ச்சிக்கு ஐந்து நாட்களுக்கு முன்னால் அனுமதி கோரினால் போதும் என்று சொல்லப்பட்டுள்ளதுதான். நிகழ்ச்சி ஏற்பாடு செய்பவர்கள் அனுமதி கிடைப்பதில் சிக்கல் வரக்கூடும். ஒரு மாதம் முன்னதாகவே அனுமதிக்கு விண்ணப்பித்தால், போலீஸ் தரப்பில் 'இன்னும் ஒரு மாதம் இருக்கிறதே. நிகழ்ச்சிக்கு ஐந்து நாட்கள் முன்னால் விண்ணப்பியுங்கள்' என்று விண்ணப்பத்தையே வாங்கிக்கொள்ள மாட்டார்கள். ஐந்து நாட்கள் முன்பு விண்ணப்பித்தால், நிகழ்ச்சிக்கு முன்தினம் வரை இழுத்தடித்து, கடைசியில் கோர்ட்டுக்குப் போகவும் அவகாசமில்லாதபடி செய்து அனுமதி மறுத்துவிடுவார்கள். சில சமயங்களில் அனுமதி மறுக்கப்படுவதை எழுத்தில் தராமல் இழுத்தடிப்பார்கள்.



● யசோத்வர்த்தன்

இத்தகைய பிரச்னைகள் வராமலிருக்க ஆட்சியில் இருப்பவர்கள் மக்கள் உரிமைகளையும், ஜனநாயக மரபுகளையும் மதிப்பவர்களாகவும், கருத்துச் சுதந்திரம் என்பது மாற்றுக் கருத்துகளை உள்ளடக்கியது என்ற மனப் பக்குவம் கொண்டவர்களாகவும் இருக்கவேண்டும். காவல்துறை சுதந்திரமாக இயங்க அரசாங்கம் வழி செய்ய வேண்டும்.

**"அனுமானத்தின் பேரில் கூட்டத்துக்கு அனுமதி மறுப்பது தவறு என்று கோர்ட் கூறியுள்ளது"**

இதைப்போன்ற கருத்துச் சுதந்திரத் தடைகள் அடிக்கடி நாட்டில் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன. விரைவில் சுப்ரீம் கோர்ட் இந்த விஷயத்தில் சில வழிகாட்டு நெறிமுறைகளைச் சுட்டிக்காட்ட இருக்கிறது. அதன் பிறகாவது நிலைமையில் முன்னேற்றம் இருக்குமா என்று பார்க்கலாம்" என்கிறார் வழக்கறிஞர் யசோத்வர்த்தன்.

**- கௌதம்ராம்**

# உங்க உடம்பில்

சில புத்தகங்களைப் படிக்காமல் இருப்பது உத்தமம். குறிப்பாக உடல் உபாதைகளை அக்குவேறு ஆணி வேறாக அலசும் மருத்துவப் புத்தகங்கள். அதிலும் குறிப்பாக, மனோதத்துவம் தொடா பானவை. பெரிய பெரிய பெயர் கொண்ட வியாதிகளைப் பட்டியல் போட்டுக் கொடுத்திருப்பார்கள். வாசிக்க வாசிக்க, அந்தப் புத்தகத்தில் கூறப்பட்டுள்ள அத்தனை அறிகுறிகளும் நமக்கும் இருப்பதாகத் தோன்றும்.

தற்சமயம் அமெரிக்காவை ஆட்டிப் படைத்துக் கொண்டிருக்கும் மார்கெலன்ஸ் நோய் அப்படிப்பட்ட ஒன்றுதான். இந்த நோயின் அறிகுறிகள் என்னென்ன தெரியுமா? நொடிக்கொரு முறை உடல் முழுவதும் அரிப்பு; உடலில் எப்போதும் ஏதாவது பூச்சி ஊர்வதைப் போன்ற உணர்வு; தோலின் நிறம் ஈஸ்ட் மென் கலரில் மாறுதல்; ஞாபக மறதி; வயிற்று வலி இத்யாதி...

மேரி லீட்டோ என்னும் கலிஃபோர்னி யாவாசிதான் மேற்படி நோயை முதலில் கண்டுபிடித்தவர். மார்கெலன்ஸ் நோய் என்று அதற்கு பெயர் வைத்தவரும் இவரே. சில ஆண்டுகளுக்கு முன்னால் அவருடைய மகனுக்குச் சில உபாதைகள். திடீர் திடீரென்று உடலில் நண்டு ஊர்வதைப் போன்ற உணர்வு. தோலின் நிறமும் மாறத் தொடங்கியிருக்கிறது. டாக்டரிடம் கொண்டுபோய்க் காண்பித்திருக்கிறார். ஏதோ ஒரு வாசனைக் களிம்பைக் கொடுத்துத் தடவச் சொல்லியிருக்கிறார்கள். உபயோகமில்லை. டப்பா டப்பாவாக கலர் கலராக மாத்திரை மருந்துகளை விழுங்கியும் உடல் அரிப்பு நிற்கவில்லை. மீண்டும் மீண்டும் நண்டு ஊர்ந்து கொண்டே இருந்திருக்கிறது. அது இன்ன வியாதி என்று ஒருவராலும் சொல்ல முடியவில்லை.

**மருதன்**

பார்த்தார்... ஒரு வெப்சைட் தொடங்கினார். 'என் பையனுக்கு இன்னின்ன உபாதைகள் இருக்கின்றன. இந்த வியாதிக்கு யாரும் பெயர் வைக்கவில்லை. அதனால் நானே ஒரு பெயரை வைக்கிறேன். இன்று முதல் இந்த வியாதியின் பெயர் மார்கெலன்ஸ்.' அதென்ன மார்கெலன்ஸ்? 17-ஆம் நூற்றாண்டில் பிரான்சில் நிறைய குழந்தைகளுக்கு இந்த நண்டு ஊரும் நோய் தாக்கியிருப்பதைக் கண்டுபிடித்த ஆராய்ச்சிக் குழுவின் பெயரே இது.

மேரி தொடங்கிய வெப்சைட்டுக்குப் பல கடிதங்கள் வரத் தொடங்கின. ஒன்று, இரண்டு, நூறு என்று தொடங்கி ஆயிரக் கணக்கான பேர் மேரியைத் தொடர்பு கொள்ள ஆரம்பித்தனர். அவர்கள் அத்தனை பேர் வீட்டிலும் யாருக்காவது ஒருவருக்கு நண்டு ஊரும் நோய் இருக்கிறதாம்.

பிரச்னை வெடித்தது இங்கேதான். தாய்மார்கள் தங்கள் குழந்தைகளைக் கூட்டிக்கொண்டு அவரவர் ஏரியாவில் இருக்கும் டாக்டர்களைப் பார்க்கக் கிளம்பிவிட்டனர்.

'டாக்டர், என் பொண்ணுக்கு மூணு நாளா மார்கெலன்ஸ் நோய் இருக்கிறது. நீங்கதான் எப்படியாவது சரி செய்யணும்?"

"இப்படி ஒரு வியாதியின் பெயரை நான் கேள்விப்பட்டதேயில்லையே!" டாக்டர்கள் திருதிருவென்று விழித்திருக்கின்றனர்.

"என்ன டாக்டர் இதுகூடத் தெரியாம இருக்கீங்க? மேரியோட வெப்சைட்டை நீங்க பார்க்கலியா?"

மண்டை காய்ந்து போன டாக்டர்கள், "அது யாருங்க, மேரி?"என்று கேட்க,

"ஐயோ! உங்களுக்கு நான் சொல்லிக் கொடுக்க வேண்டியதாப் போயிடுச்சே?" என்று சலித்துக்கொண்டே மார்கெலன்ஸ் பற்றி டாக்டருக்கே வகுப்பெடுக்கத் தொடங்கிவிட்டிருக்கின்றனர்.

ஒரு டாக்டர் தலையைச் சொறிந்துகொண்டே தமது சீனியரைத் தொடர்பு

# நண்டு ஊருதா?

கொண்டு இதைப் பற்றிக் கேட்க, அவரோ இத்தனை வருட சர்வீஸில் அப்படி ஒரு வியாதியைப் பற்றி ஒரு இன்ச்கூட கேள்விப்பட்டது கிடையாது என்று கையை விரித்துவிட்டிருக்கிறார். சீனியரின் சீனியருக்கும் இதைப் பற்றி எதுவும் தெரியவில்லை. ஆனால், ஒவ்வொரு நாளும் நூற்றுக்கணக்கான பேர் இந்த வியாதியின் பெயரைச் சொல்லிக்கொண்டு ஆஸ்பத்திரிகளை முற்றுகையிட ஆரம்பித்தனர். அமெரிக்கா எங்கும் பரபரப்பு தொற்றிக்கொண்டது.

இப்போது குழப்பமே இதுதான். உண்மையிலேயே இப்படி ஒரு வியாதி இருக்கிறதா? 'இல்லை' என்கிறார்கள் மருத்துவர்கள். அப்படியானால் நண்டு ஊறுவது ஏன்? தோல் நிறம் மாறுவது ஏன்? 'தேமல்கள் தோன்றலாம், தோல் தடிக்கலாம். இதெல்லாம் சாதாரணக் குறைபாடுகள்தான். மற்றபடி நண்டு ஊறுவது, நரி ஊறுவது எல்லாம் நாமே நினைத்துக்கொள்வதுதான்.



மனப்பிரம்மை என்பார்களே அது தான் இது. 'உங்கள் உடலில் நண்டு ஊர்வதுபோல் இருக்கிறதா? தலை லேசாகச் சுற்றுகிறதா? காது அடைக்கிறதா? தோல் நிறம் மாறுகிறதா? அப்படி என்றால் உங்களுக்கு மார்கெலன்ஸ் நோய்தான்.' இப்படிப் போட்டுப் பயமுறுத்தினால் நூற்றுக்கு எண்பது பேர் தங்களுக்கு மார்கெலன்ஸ் நோய் இருப்பதாகத் திடமாக நம்புவார்களாம். உளவியல் மருத்துவர்கள் அடித்துச் சொல்கிறார்கள்.

சில புத்தகங்களைப் படிக்காமல் இருப்பது எத்தனை உத்தமமானதோ, அத்தனை உத்தமமானது சில வெப்சைட்டுகளைப் பார்க்காமல் இருப்பதும்.

போட்டிக் கதை

# வீடுபேறு

என் வீட்டு மேல் தளத்தைச் செப்பனிட்டுப் புதுப்பித்து, ரெண்டு பெட்ரூம் தளத்தை மூணு பெட்ரூமாய் விஸ்தாரப்படுத்தி முடித்தபோது பெண்டு கழண்டுவிட்டது. இப்போது அடுத்த பிரச்னை, அதில் குடி வருவதற்கு நாகரிகமான, தகராறு சச்சரவு பண்ணாத அடக்கவொடுக்கமான பார்ட்டியாய் அமைய வேண்டுமே என்பதுதான்.

இந்தச் சிந்தனையில் ஆழ்ந்திருந்தபோதுதான் வீடு கேட்டு வந்தான் ஹீரா. என் சொந்த சாச்சா மகன் ஹீரா.

உறவுக்காரன் என்பதற்காக வாடகையில் சலுகை ஏதும் வேண்டாம், பத்தாயிரம் தர ரெடி என்றான். அல்லா, ஒரு பெரிய பிரச்னை தீர்ந்தது என்று ஹீராவுக்கு உடனடியாய் ஓ.கே சொல்லி அனுப்பி வைத்தேன்.

மாடியில் குடியிருக்க பார்ட்டியைப் பிடித்துவிட்ட, அதிலும் நம் சொந்தத்திலேயே பிடித்துவிட்ட நல்ல சமாசாரத்தை, சம்சாரத்தோடு பகிர்ந்துகொண்டபோது என்னுடைய சந்தோஷமோ, நிம்மதியோ அவளுடைய முகத்தில் பிரதிபலிக்கவில்லை.

"நல்லா யோசிச்சித்தான் ஒங்க சாச்சா மகனுக்கு சம்மதஞ் சொன்னீகளா?" என்று ஒரு கொக்கியைப் போட்டாள்.

"ஆமா... வந்து... ஒன்னயும் ஒரு வார்த்த கேட்டுப்புட்டு ஓ.கே சொல்லியிருக்கலாம். ஆனாலும் சொந்தக் காரனாச்சே, பிரச்னையில்லாத பார்ட்டியாச்சேன்னு..." என்று நான் நீட்டி முழக்கினதை தயவு தாட்சண்யமில்லாமல் இடைமறித்தாள்.

"பிரச்னையில்லாத பார்ட்டின்னு எப்படிச் சொல்றீக? அந்த ஹீராவோட அம்மா, ஒங்க சாச்சி, சிக்காளியா படுத்துக் கெடக்கறது ஒங்களுக்குத் தெரியாதா?"

"ஃபாத்திமா, நீ என்ன சொல்ற?"

"நாலு லச்சம் செலவு பண்ணி வூட்ல மராமத்து வேல பாத்திருக்கோம், பெருசாக்கிக் கட்டியிருக்கோம். அதுல மொத மொதலா ஒரு சிக்காளியக் கொண்டாந்து குடி



ஏ.ஏ.ஹெச்.கே.கோரி

வைக்கணுண்டு சொல்லுதியளே, அது இன்னிக்கோ நாளைக்கோன்னு ஊசலாடிட்டிருக்கற உசுரு. பொசுக்குண்டு அது போவணும், நம்ம வூடு சாவு வூடா ஆவணும்ங்கறியளா? வாடகத்தி ஆள் வந்த கையோட வூட்ல ஷாமியானா கட்டிரணும்ங்கறியளா? ஒடனே போய்ச் சொல்லிப்புட்டு வாங்க, வூடு விடறதுக்கில்லண்டு.''

''எனக்கு மனசு கேக்கல ஃபாத்திமா. நீ கொஞ்சம் பெரிய மனசு பண்ணப்படாதா?''

''நாளக்கி நீங்க போய்ச் சொல்லலண்டா நானே போன் போட்டுச் சொல்லிப்புடுவேன்.''

ஒரு அச்சுறுத்தலோடு ஃபாத்திமா தன்னுடைய உருவிய வாளை உறையில் போட்டாள்.

**ம**றுநாள்... நான் ஹீராவின் வீட்டுக்குக் கிளம்ப ஆயத்தமான போது போன் மணி ஒலித்தது. ரிஸீவரை எடுத்து ஹலோ சொன்ன ஃபாத்திமா, 'இந்தாங்க, கொஞ்சம் இரிங்க' என்றாள் என்னிடம்.

பிறகு போனில் வந்த செய்தியைத் தெரிவித்தாள்.



## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில்
## பிரசுரத்துக்குத் தேர்வான கதை

''ஒங்க சாச்சி ராத்திரி மவுதாய்ட்டாகளாம். சாயங்காலம் அசருக்குப் பெறவு அஞ்சு மணிபோல எடுக்கறாகளாம்.''

சரி, கிளம்பின கையோடு போய்ப் பார்த்துவிட்டு வந்துவிடுகிறேன் என்றதற்கு அனுமதி கிடைக்கவில்லை. ''இப்பப் போய் என்ன செய்யப் போறீக,



# அடையாளம்!

'வட்டாரம்' மூலம் சரணால் அடையாளப் படுத்தப்பட்டிருப்பவர் அனுப். பி.சி.எஸ். முடித்துவிட்டு சினிமாவில் நடிக்கும் ஆர்வத் தோடு போராடியவருக்கு நான்கு வருட கடும் முயற்சிக்குப் பிறகு பலன் கிடைத்திருக்கிறது. 'இளமை இதோ இதோ' என்னும் படம்தான் முதல் படம். இதில் மூன்று ஹீரோக்களில் ஒருவராக நடித்திருக்கிறாராம். 'வட்டாரம்' பற்றிக் கேட்டால் சிலிர்க்கிறார் அனுப்.

"ஒரு நல்ல கேரக்டர் இருக்கிறது என்று சரண் சார் சொன்னார். பெரிய இயக்குனரின் படம் என்பதால் கேரக்டர் ரோல் என்றுகூட பார்க்காமல் நடித்தேன். ஆர்யா, ராம்ஜிக்குப் பிறகு 'வட்டாரம்' அனுப் எனுமளவுக்கு இந்தப் படத்தில் எனக்குப் பெயர் கிடைத்திருக்கிறது.

நல்ல கதை, நல்ல டீமுடன் வித்தியாசமான படங்களில் நடிக்கணும். ஆரம்பத்தில் நடிப்புக்கு வேலை கொடுக்கும் வேடத்தில் நடித்துவிட்டு விக்ரம், சூர்யா போன்று கெட்டப் மாற்றி நடிக்கணும். ஆனால் முழுக்க அவர்களை அப்படியே இமிடேட் செய்யாமல் எனக்கென்று ஒரு பாணியை வகுத்துக் கொள்வேன்'' என்கிறார் அனுப்.

மத்யானம் லொஹருக்கப்பறம் போவலாம், நானும் வரணும்ல?'' என்றாள்.

**ம**த்யானம் புறப்பட்டுப் போனோம்.

ஹீராவின் வீட்டுப் பகுதியில் ஆளரவமே இல்லாதது ஆச்சர்யமாயிருந்தது. வீட்டை நெருங்கியபோது, உள்ளேயிருந்து வெள்ளை வேட்டி சட்டை, நெற்றியில் விபூதியணிந்த ஒரு நபர் அவசரமாய் வீட்டுக்குள்ளிருந்து வெளியே வந்தார். 'விலாசம் மாறி வந்து விட்டோமா?' என்கிற சந்தேகத்தில் நானிருந்தபோது, "ஹீரா பாய் வீட்டுக்குத்தானே வந்தீங்க, இதான் சார் வீடு'' என்று புதிரைப் பெரிதாக்கினார்.

"என் பேர் கணேசனுங்க, ஹீரா பாயோட ஃப்ரெண்ட். 'வீடு சின்ன வீடாச்சே ஜனம் நெறைய வருமே எப்படிச் சமாளிக்கிறது'ன்னு தடுமாறிட்டிருந்தான். 'அடப் பைத்தியக்காரா, அரண்மன மாதிரி நம்ம வீடு இருக்கு. எதுக்கு யோசிக்கிற, நம்ம வீட்ல கொண்டு போய் வச்சிருவோம்னு, பாடிய நம்ம வீட்டுக்கு ஷிஃப்ட் பண்ணிட்டோம். காரியமெல்லாம் நம்ம வீட்லதான் நடக்குது. கஃபன் துணியாமே, 'வெள்ளத் துணியொண்ணு டேபிள் மேல வச்சிருக்கேன், கொஞ்சம் எடுத்துட்டு வந்துரு கணேசா'ன்னான். அதான் எடுத்துட்டு வீட்டப் பூட்டிட்டுக் கெளம்பறேன். இங்க வர்றவங்களுக்குத் தகவல் சொல்ல ஒரு பையனப் போட்டிருந்தோம். சோம்பேறி, எங்கயாவது டீ சாப்புடப் போயிருப்பான். நீங்க வண்டிய இங்கயே விட்டுட்டு எம் பின்னாடி வாங்க சார். அடுத்த தெரு திரும்புனவொடன மூணாவது வீடு."

கணேசன் வேகமாய் நடக்க, நாங்கள் ஓட்டமும் நடையுமாய்ப் பின் தொடர்ந்தோம். அடுத்த தெருமுனை திரும்பினவுடன் ஷாமியானா கண்ணில் பட்டது.

சட்டென்று ஃபாத்திமா என் கையைப் பற்றித் தன்னை நோக்கி இழுத்தாள். நான் முகத்தைத் திருப்பி அவளைக் கூர்மையாய்ப் பார்த்தேன்.

"புத்தி கெட்டுப் போய்ட்டேங்க, அல்லாவுக்காக என்ன மன்னிச்சிருங்க'' என்றாள் கண்கள் பனிக்க. ●

## அருள்வாக்கு



பணம், படிப்பு, எல்லாம் ஆத்ம விஷயமாகக் கொண்டு விடுவதற்குத்தான். தாம்பத்யம் உள்பட எல்லாமே அதற்குத்தான் சிருஷ்டியில் வைக்கப் பட்டிருக்கிறது. சிருஷ்டியில் யாரும் சிரஞ்ஜீவி யாக இருக்க முடியாது - பகவானே ரொம்ப அபூர்வ மாக அப்படி வைத்த ரொம்பக் கொஞ்சம் பேரைத் தவிர, பாக்கிப் பேர் செத்துத்தான் போகணுமென்று சிருஷ்டி நியதி. ஆனால் செத்துப் போகும்போது கர்மா பாக்கி தீர்ந்து nil balance-ஆக இருப்பதில் லையே! அப்படியிருந்தால் தானே ஸ்ருஷ்டியிலிருந்து விடுபட்டுப் பரமாத் மாவுடன் சேரலாம்! ஆனால் அப்படியில் லையே! இந்த மாதிரி இருக்கும்போது அந்த ஆவிக்கு இன்னொரு சான்ஸ்; அதுவும் தப்பினால் அப்புறமும் பல சான்ஸ் கள் என்று ஜன்மா ஜன்மாவாகக் கொடுத்துத் தானே அவற்றிலாவது கர்மாவைக் கழித்துக் கொள்ள வாய்ப்புக்கள் தர வேண்டியிருக் கிறது? இப்படி ஒரு ஜீவன், ஜன்மாக்கள் எடுக் கணுமென்றால் அதற்காக ஓர் அப்பா, அம்மாவுக்குள் தாம்பத்யம் இருந்தால்தானே முடியும்? அதாவது, தாம்பத்யம் என்று வைத்திருப்பதும் இன்னொரு ஜீவன் கடைத்தேறச் 'சான்ஸ்' கொடுக்கும் நல்ல உத் தேசத்தில் தான் என்று தெரிகிறது.



# அர்த்தம் அனர்த்தமானால்...

இப்படித்தான் பணத்தால், சாப்பாட்டால், வீட்டால், வைத்தியத்தால் சரீர ரக்ஷணை கொள்வதும், படிப்பால் அறிவு அபிவிருத்தி செய்துகொள்வதுங்கூட ஒவ்வொரு ஸ்டேஜ் வரை ஆத்ம விஷயமாகப் போவதற்காக உதவி செய்யத்தான். என்ன அளவில், எந்த ஸ்டேஜ் வரையில் என்று தெரியாமல் நாம் 'மிஸ்-யூஸ்' பண்ணிக் கொள்வதில் தான் ஒரே அனர்த்தமாகிறது. 'அர்த்தம் அனர்த்தம்' என்று ஆசார்யாளே 'பஜகோவிந்த'த்தில் இதைச் சொல்கிறார். அது 'மூட மதி'க்கு 'அட்ரஸ்' பண்ணியது (பஜகோவிந்தம், மூடமதே!) என்பதையும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்! புத்திசாலியாயிருந்தால் லௌகிகம் என்று இருக்கிறவற்றைக் கொண்டே, அவற்றைத் தக்க அளவில், தக்க காலம் வரை 'யூஸ்' பண்ணிக் கொண்டே, ஆத்மிகத்துக்குப் போய்ச் சேரலாம்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

எஸ்.எஸ். மியூசிக் பார்ட்டிகளிடம்
உங்களைப் பற்றி நீங்களே
சொல்லுங்க என்றோம்.
பின்னிப் பெடலெடுத்து விட்டார்கள்...

ஹைதராபாத் ஐஸ்க்ரீம்
பாப் லாங் பெங்கிலை
குட்டிக் குட்டிக் கவிதை வேண்டும்
ஒற்றுமை இந்தியா ஓங்குக
உயரே பறக்கட்டும் எமது கொடி

பெங்களூர் ரோஸ்
சென்னைக்கு வந்து பத்து வருடம்
பெருசா எந்த ஆசையும் இல்லாத
அப்பிராணி

சினிமாவுக்கு நோ நோ
சாமியே சரணம் எஸ்.எஸ்.மியூசிக்

# 'பஞ்ச்' பூதங்கள்!



நாட்டி ட்வென்டி ஃபைவ்
பார்ட்டி பட்டர்ஃப்ளை
பட்டப்பேரு கேரட்
ரொம்பப் பிடிக்கும் பீட்ரூட்
சன் வெரி ஹாட்
நான் ரொம்ப சாஃப்ட்

- மனோ, படங்கள் : சுந்தரம்

உலகம் சுற்றும் வாலிபன்
இளமை ஊஞ்சலாடுகிறது
சம்திங் சம்திங் எனக்கும் எல்.எல்.க்கும்
ஒரு நாள் முதல்வன்
ஆவான் இந்தத் தலைமகன்







பூக்கள் பொறாமைப்படும்
புன்னகை ஃப்ளாஷ் அடிக்கும்
இதயம் நொறுங்கிவிடும்
இரக்கம் பிறந்துவிடும்
கவலை மறந்துவிடும்
கணினி மறைந்துவிடும்
திரையில் நான் தோன்றிவிட்டால்
தினமும் வான் பொழிந்துவிட்டால்

# அமரர் கல்கி



அநேகருடைய உழைப்பின் பலனைக் கொள்ளைகொண்டு ஒரு சிலர் செல்வமாய் வாழ்வது அநியாயமேயானாலும், மேற்சொன்ன ஏற்பாட்டினால்தான் உலகில் நாகரிகம் வளர்ந்து வந்தது என்பதை நாம் கவனிக்க வேண்டும். பணக்காரனுக்கும் அவனைச் சூழ்ந்த நாலு பேருக்கும் வயிற்றுச் சோற்றுக்கு வேலை செய்ய வேண்டிய அவசியம் இல்லாதபடியால் அவர்கள் படிப்பு, பாட்டு, சித்திரம்,




# மனிதன் செய்யாதது!

சிற்பம் முதலிய கலைகளில் கவனம் செலுத்தி அவைகளை வளர்த்தல் சாத்தியமாயிற்று. அல்லாமலும், உழைப்பாளிகளுக்குள்ளே உழைக்க முடியாதவர்களாய்ப்போன வயோதிகர்கள், நோயாளிகள் முதலியவர்களைச் சம்ரட்சிப்பதற்கும் பணக்காரர்கள் தங்களுடைய பணத்தில் சிறு பகுதியை உபயோகப்படுத்தினார்கள். இந்த ஏற்பாடு பழைய காலத்தில் அவசியமாகவும், நன்மை பயப்பதாகவும்கூட இருந்திருக்கலாம். ஆனால் இந்நாளில் அவ்வேற்பாடு அவசியமில்லை; அதனால் நன்மையும் கிடையாது.

பிறருடைய உழைப்பைக் கொண்டு ஜீவித்த வகுப்பார் எல்லாருமே பொல்லாதவர்களாயில்லை. இவர்களில் சிலராவது தங்களுடைய சோற்றுக் கடனைத் தீர்த்துக் கொண்டார்கள். எப்படியெனில், மனிதனுடைய உழைப்பையே பெரிதும் குறைத்து விடும்படியான இயந்திரத்தை அவர்கள் கண்டு பிடித்தார்கள். இயந்திரம் மனித சமூகத்தின் வாழ்க்கை முறையில் ஒரு பெரிய புரட்சியை உண்டு பண்ணியிருக்கிறது.

மனிதனை அறியாமை என்னும் சாபக்கேடு மட்டும் சூழாமலிருந்திருந்தால், அவன் இயந்திரத்தின் உதவியைக் கொண்டு இவ்வுலகிலிருந்து வறுமைப் பேயை ஓட்டியிருக்கலாம். அவன் அப்படிச் செய்யவில்லை. அதற்குப் பதிலாக உலகில் வறுமையையும் துன்பத்தையும் அதிகப்படுத்துவதற்கே இதுவரையில் இயந்திரத்தை உபயோகப்படுத்தி வந்திருக்கிறான்! மனிதனுடைய அறியாமை நீங்கி, அவன் எப்போது இயந்திரத்தை மனித குலத்தின் க்ஷேமத்துக்காக உபயோகப்படுத்த ஆரம்பிக்கிறானோ, அப்போதே புது உலகம் தோன்றும்.

- வானதி பதிப்பகத்தின்
'அதிர்ஷ்ட கவசம்' நூலிலிருந்து..

# அனுபவம்



## மன்னித்துவிடு ஆஞ்சநேயா!

**ச**மீபத்தில் குடும்பத்தோடு அஹோபிலம் சென்றிருந்தோம். நவநரசிம்மரைத் தரிசித்து முடிக்கும்போது மிகவும் களைத்து விட்டோம். அப்போது ஒருவர், 'பக்கத்தில் ஒரு சின்ன அனுமார் சன்னதி உள்ளது. அவரையும் ஸேவித்து வரலாம்' என்றார். அதற்கு நான் 'அப்பாடா! என்னால் வர முடியாது. நரஸிம்மரை சேவித்ததே போதும்' என்று சொல்லிவிட்டேன். மற்ற அனைவரும் அனுமாரை சேவிக்கப் போய்விட்டனர். என் கணவர் ஓரிடத்தில் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தார். நான்கைந்து குரங்குக் குட்டிகள் அவரைச் சுற்றி விளையாடிக் கொண்டிருந்தன. அவரை எழுப்பச் சென்றபோது, அவரை ஒன்றும் செய்யாத குட்டிகள், என்னைப் பார்த்ததும் என் மீது 'உர்...உர்...' என்று பாய வந்தன. பயந்து போனேன். அப்போதுதான் நான் அனுமாரைச் சேவிக்க வரமாட்டேன் என்று சொன்னது ஞாபகம் வந்தது. 'ஆஞ்சநேயா! என்னை மன்னித்து விடு' என்று அனுமாரை பார்க்க கிளம்பினேன். குரங்குகளும் ஜூட்!

**- ஆர். ஜானகி ரங்கநாதன், சென்னை - 4**

## தலை குனிந்தேன்!

**நா**னும் என் வயதான தாயாரும் பூரி ஜகந்நாதரைப் பார்க்கச் சென்றோம். கோயிலுக்குள் ஏக கூட்டம். அங்கிருந்த பிச்சைக்காரர்களில் ஒருவர் என்னிடம் 'இந்தியாவிலேயே பிரசித்தி பெற்ற க்ஷேத்திரமாகிய பூரிக்குத் தரிசனம் செய்ய வந்திருக்கிறீர்கள். நம் ஆசாரமான பஞ்சகச்ச வேஷ்டி அணிந்து வர சொல்லித் தரணுமா? அமெரிக்காவில் இருந்து வந்தவர்கள் நம் ஆசாரப்படி பஞ்சகச்ச வேஷ்டி அணிந்து பஜனை செய்துகொண்டு வருவதைப் பாருங்கள்" என்று தூரத்தில் வருவோரைக் காட்டினார் ஓரியா மொழியில். நான் வெட்கித் தலைகுனிந்தேன்.

**- சுப்பு, சென்னை - 42**





சொல்லும் பொருளும் போலத்தான் உள்ளமும் உடலும். சொல்லும் பொருளும் இனிதாய் அமைந்தால் சுவையான வார்த்தை. உள்ளமும் உடலும் இனிதானால் சுவையான வாழ்க்கை. கவுண்டமணி-செந்தில் மாதிரி உடலும் உள்ளமும் கலாய்த்தால் நம்மை பார்ப்பவர்களுக்குத்தான் காமெடி; நம் வாழ்க்கை டிராஜடிதான்.

உடம்பைப் பராமரிக்க நல்ல உணவும், உள்ளத்தை வலுப் படுத்த நல்ல உணர்வும் தேவை என்பேன். அதிலும் செவிக் குணவு நகைச்சுவைதான்.

போட்டி, பொறாமை, கெட்ட எண்ணம், எரிச்சல் போன்ற பகைச்சுவைகளைப் போக்க நகைச்சுவையே நல்ல மருந்து.

இந்த மருந்தே பி.பி., கொலஸ்ட்ரால், ஷுகர் வராமல் பார்த்துக்கொள்ளும். 'அதனால்தான் வாய்விட்டுச் சிரித்தால் நோய்விட்டுப் போகும்' என்றார்கள். நோய் விட்டுப் போகுமென்ன போகும்... நோயே வராது என்பேன் நான்.

நம் உடம்பில் வாய்க்கும் வயிற்றுக்கும்தான் பிரச்னையே. வாய்க்குப் போதும் என்று தோன்றுவதில்லை. வயிறு போதுமென்று சொல்ல நேரமாகிறது.

'அன்னத்தை முத்தமிட்டு உண்', 'நொறுங்கத் தின்றால் நூறு வயது' என்று சொன்னதெல்லாம் நாம் குறைவாகவும், மெதுவாகவும் உண்ணச் சொல்லித்தான்.

நான் பெரும்பாலும் வீட்டு உணவையே விரும்புகிறவன்; உணவுமுறைகளில் நமது வீடுகளில் இருந்துவரும் நடைமுறைகளைத் தொடர்ந்தாலே போதும்.

எங்கள் வீடும் அப்படித்தான். ஒரு வாரத்தை எடுத்துக்கொண்டால் கீரை, வாழைத்தண்டு, வற்றல் வகைகள், காய்கறிகள் என்று ஓர் ஒழுங்கு முறையில் சமையல் இருக்கும்.

மாறாக, அந்த டிப்ஸ், இந்த டிப்ஸையெல்லாம் படிப்பதோ, பார்ப்பதோ இல்லை. டிப்ஸ் எல்லாமே தப்ஸ்தான்.

குடும்பச் சாப்பாடு சாப்பிட்டால் குடும்ப மருத்துவர் போதும்; வெளியே சாப்பிட்டால், வெளியில் காஸ்ட்லியான மருத்துவரைத் தேட வேண்டியதுதான்.

குடும்பத்தில் பாட்டியிடம், தாயிடம், மனைவியிடம் கையேந்தி உணவு உண்ணாமல், கையேந்தி பவனுக்குப் போவதால்தான் பிரச்னையே.

நான் தினந்தோறும் நான்கு மணிக்கு எழுந்துவிடும் பழக்கமுடையவன். காலையில் ஒரு மணி நேரம் நடைப்பயிற்சி (பீச் வாக்கிங், பேச்சு வாக்கிங் ஆனதால் மொட்டை மாடியில்) யோகாசனங்களை முடித்தபின் சாப்பாடு. சிற்றுண்டி என்பதே கிடையாது. சாப்பாடுதான். வயிறார உண்டு வெளியே செல் லும்போதுதான் கண்டதைத் தின்னும் எண்ணம் ஏற்படாது. மூன்று வேளையும் தயிர் சாதம் இருந்தாலே எனக்குப் போதும்.

# யோக்கியத்தில் இருக்கிறது ஆரோக்கியம்!

## கிரேஸி மோகன்

அதேபோல் நீராகாரம் இதற்கு இணையான மருந்து உலகில் இல்லை. மரியாதையான ஆகாரம் நீர் + ஆகாரம்.

டீனேஜர்கள்கூட இப்போதெல்லாம் 'எனக்குப் பாதிச் சர்க்கரை போதும்', 'ஆயில் அயிட்டம் அவாய்ட் பண்றேன்'



என்றெல்லாம் அலம்புகிறார்கள். அது தேவையில்லாத ஒன்று. உணவை விரோதிக்க வேண்டியதில்லை. எதை எதையெல்லாம் விரோதம் செய்து ஒதுக்குகிறீர்களோ, அந்தக் கோபத்தில் அது வயதான பின்பு' கவனிச்சுக்கிறேன் இவனை' என்று சொல்வது என் காதில் கேட்கிறது.

எல்லோரும் கட்டாயம் உடற்பயிற்சி செய்ய வேண்டும். முப்பது வயதைத் தாண்டிவிட்டால் தொப்பை ஒரு வரப் பிரசாதமாக மாறிவிடுகிறது. 'என்ன இனி மேல் இருக்கு!' என்கிற 'மனத் தொப்பை தான்' இதற்குக் காரணம் என்பார் கமல்ஹாசன்.

நடைப்பயிற்சி, யோகாசனம், உணவு முறை, நண்பர்கள், குடும்பம், நகைச்சுவையுணர்வு ஆகியவையே என் உடல் நலத்தின் ரகசியங்கள்.

எல்லாவற்றையும்விட எண்ணத்தை மகிழ்ச்சியாக, மலர்ச்சியாக வைத்திருந்தாலேபோதும். உடலும், வாழ்வும் நலமுறும்... அதனால்தான் என்னுடைய வழிபாட்டின்போது,

'தன்செயல் எண்ணி
தவிர்ப்பது தீர்ந்திங்கு
நின் செயல் செய்து
நிறைவு பெறும் வண்ணம்
நின்னைச் சரணடைந்தேன்'

என்பதை மனமுருகப் பாடுகின்றேன்.

சந்திப்பு : **ஆதித்யா**

படம் : **பொள்ளாச்சி சுந்தரம்**



# எளிமையின்

## நேதுநூரி கிருஷ்ணமூர்த்தி – 80

"என்னால் உனக்குப் பள்ளிக்கூட ஃபீஸ் கட்டிப் படிக்க வைக்க முடியாது. இலவசமா எதைக் கத்துக்க முடியுமோ, அதைக் கத்துக்கப் பார்" என்று கண்டிப்பாகக் கூறிய தந்தையைப் பார்த்து அந்தச் சிறுவனால் ஒன்றும் சொல்ல முடியவில்லை. காரணம் குடும்பத்தின் சூழ்நிலை. அவனுக்கு இலவசமாக ஒருவர் இசை கற்றுக் கொடுக்க முன்வர, அப்பா கூறியதை உத்தேசித்துப் பயில ஆரம்பித்தான். அன்று ஆரம்பித்த பயணம், எண்பது வயதைத் தாண்டியும் கம்பீரமாகத் தொடர்ந்து கொண்டிருக்கிறது.

ஆர்வமும், உழைப்பும்தான் ஒரு மனிதனை உயர்த்தும் மகத்தான சக்திகள் என்பதற்குச் சிறந்த உதாரணம் நேதுநூரி கிருஷ்ணமூர்த்தி. தமது அறுபது வருட இசை வாழ்க்கையில் ஆந்திராவிலிருந்து அரை நூறாண்டுகாலம் தவறாமல் தொடர்ந்து சென்னை வந்து, மியூசிக் அகாடமியில் கச்சேரி செய்த சாதனையாளர். "சங்கீதத் துறைக்கு வந்ததற்கு என்றுமே நான் வருத்தப்பட்டதில்லை. செய்ய வேண்டியவை நிறைய இருக்கின்றனவே என்பதுதான் குறை. ஒவ்வொன்றாகப் பண்ண ஆரம்பிக்கணும்" என்கிறார் இந்த எண்பது வயதிலும்.

"லால்குடி ஜெயராமனும் பாலக்காடு ரகுவும் என் கச்சேரிகளுக்கு நிறைய வாசித்திருக்கிறார்கள். குறிப்பாக, லால்குடி தருகிற தேதிக்குத் தகுந்த மாதிரி நான் கச்சேரிகளை ஒப்புக் கொண்டதுண்டு!" என்னும் நேதுநூரிக்கு, குருவைப் பற்றிப் பேசும் போது கண்கள் பனித்துப் போகின்றன.

"பத்மபூஷண், சங்கீத கலாநிதி டாக்டர் ஸ்ரீபாத பினாகபாணியிடம் குருகுல வாசம்போல் பயின்றவன் நான். அவருக்குத் தொழில் மருத்துவம். ஆனால் இயற்கையாகவே அவர் இசைக் கலைஞர்" என்று பெருமிதப்படுகிறார்.

அன்னமாசார்யா கீர்த்தனைகளுக்கு மெட்டமைத்துப் பிரபலப்படுத்தியவர் என்கிற பெருமையும் இவருக்கு உண்டு.

"எம்.கிருஷ்ணசாமிதான் என்னை உற்சாகப்படுத்தினார். பிறகு 108 பாடல்களுக்கு இசையமைத்தேன். பின் 40 பாடல்களை எடுத்துக்கொண்டேன். அமெரிக்க லாஸ் ஏஞ்சல்ஸ் நகரத்திலுள்ள டாக்டர் ரவி ஜந்த்யாலாதான் ஸ்பான்சர் செய்தார்" என்கிறார் நேதுநூரி.

இவர் செகந்தராபாதில் அரசு வேலையாக இருந்தபோது, 'எம்.எஸ். சுப்புலட்சுமி சில அன்னமாச்சார்யா பாடல்களைக் கேட்டுவிட்டு, உங்களிடமே கற்றுக்கொள்ள வேண்டும் என்கிறார்'



என்ற செய்தி தாங்கி ஒரு தந்தி வந்திருக்கிறது. இதற்கு ஆன் ட்யூட்டியில் சென்னைக்குச் சென்று வர அரசு அனுமதித்திருக்கிறது.

'ஒக்க பரி' என்ற ஒரே ஒரு பாடலை எம்.எஸ். என்னிடம் நேரிடையாகக் கற்றுக் கொண்டார். பாவமுலோன, சேரி யசோதகு, நானாட்டி ப்ரதகு நாடகமு மூன்றையும் கேசட்டில் பதிவு செய்து வாங்கிக் கற்றுக்கொண்டார். 'நானாட்டி ப்ரதகு' பாடலுக்கு மெட்டமைத்ததற்காக

# இலக்கணம்!

மட்டுமே உங்களுக்குச் சங்கீத கலாநிதி தரலாம்' என்றார் எம்.எஸ். அப்போது!'' என்று நெகிழ்கிறார் நேதுநூரி.

இதுவரை சங்கீத கலாநிதி உட்பட 31 விருதுகள் இவருக்கு வழங்கப்பட்டிருக்கின்றன. பல இசைக் கல்லூரிகளில் இசைப் பேராசிரியராகவும், டீன் ஆகவும், தலைவராகவும், விசிட்டிங் பேராசிரியராகவும் பதவி வகித்திருந்தாலும் எளிமையின் இலக்கணம் என்றுதான் இவர் அழைக்கப்படுகிறார்.

''ரசிகர்களின் ரசனையை உயர்த்த வேண்டியது கலைஞனின் பொறுப்பு. அவர்களின் ரசனை குறைவாக இருக்கிறது என்று கலைஞரும் தரம் தாழ்ந்து விடக் கூடாது. அது கலைக்குச் செய்யப்படும் அநீதி. ரசிகர்களும் கலைஞரிடம் டிமாண்ட் செய்ய வேண்டும்!'' என்று கூறும் நேதுநூரிக்கு நிறைய சீடர்கள்.

மல்லாடி பிரதர்ஸ், அவரின் பெயரை இன்று உயர்த்திப் பிடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

- சாருகேசி

## தேன்துளிகள்

* மகாகவி பாரதியாரின் படைப்புகளை ஆதாரபூர்வமான (standard edition) நூல்களாக வெளியிடுவதாகத் திட்டமிட்டு, விஜயபாரதி வெளியீடு அவற்றின் முதல் தொகுதியான 'தேசிய கீதங்'களை 2006 டிசம்பர் மாதம் 11-ஆம் தேதி, பாரதியின் பிறந்தநாளன்று வெளியிடுகிறது.

* பாடகர் சஞ்சய் சுப்ரமண்யம் பற்றிய குறும்படம் ஒன்றைத் தயாரித்திருக்கிறார் பிரசன்னா ராமசாமி.

* சிவகாமியின் சபதம் நாவலை மிகப் பெரிய மேடை நாடகமாக்கும் முயற்சியை பல்வேறு குழுவினர் இணைந்து மேற்கொண்டுள்ளனர். இதன் முன்னோட்டம் சிங்கப்பூரில் நடந்தது. கதையை அறிமுகப்படுத்தும் விதமாக ஒரு சிறு நாடகம் அமைத்து வழங்கினார் கௌரி ராம் நாராயண். தாத்தாவின் கற்பனைக் கதாபாத்திரமான குண்டோதரனுக்கு ஒரு மகனை உருவாக்கி அதில் உலாவ விட்டார் பேத்தி கௌரி. குண்டோதரனின் மகனுக்கும் சிவகாமிக்குமான உரையாடலாக அமைந்த 'முன்னோட்ட' நிகழ்ச்சியில் கௌரியே சிவகாமியாகத் தோன்றி நடிக்கவும் பாடவும் செய்தார்.

* லால்குடி ஜெயராமனின் மருமகள் லலிதா கிருஷ்ணன், ஹிந்து நாளிதழில் இசை விமர்சனங்கள் எழுதி வருகிறார்.

* ஹிந்துவில் இசை விமர்சனங்கள் எழுதும் ஜி.சுவாமிநாதன், தேவவிரதன் என்ற புனைபெயரில் சிறுகதைகள் எழுதி வருகிறார்.

* முக்கூர் லக்ஷ்மி நரசிம்மாச்சார்யாரின் மகள் கோதாஸ்ரீக்கும் சார்டர்ட் அகவுண்டன்ட் டி.எஸ்.சுந்தரராஜனின் மகன் லக்ஷ்மி நரசிம்மனுக்கும் மட்டபல்லியில் கடந்த நவம்பர் மூன்றாம் தேதி திருமணம் நடந்தது.

- ருணுஜூணு



• சஞ்சய் சுப்ரமண்யம்

# தேடலில் தொலைந்த மனம்!

நாடக உலகத்தின் நட்சத்திரமாகப் புகழப்பட்ட டி.கே.எஸ்.ஸிடம் தமது நாடகப் பிரதியை வாசிக்கக் கொடுத்த ஒருவர், 'முதல் மூன்று காட்சிகளுக்கு மேல் என் நாடகத்தைப் படிக்க முடிய வில்லை என்றால், என் எழுத்து உங் களைக் கவரவில்லை எனப் பொருள்' என்று கூறி, கொடுத்த பிரதியை மீட்டுக் கொள்கிறார். தொடர்ந்து, நாடக அரங்கில் பிரசித்தி பெற்று விளங்கிய டி.கே.எஸ். சகோதரர்களிடம் அத்தனை காத்திரமாகப் பேச அன்றைய நாளில் யாரும் துணிந்திருக்க மாட்டார்கள். பணிபொருட்டு படிக்க முடியவில்லை என்றதற்கே கோபித்துக் கொண்ட அந்த ஒருவர் வேறு யாருமல்ல, கு.சா.கிருஷ் ணன்.

காலக் காகிதத்தில் அழிக்க முடியாத அற்புதப் பாடல்களை எழுதிய கு.சா.கி., 1914-ல் கும்பகோணத்தில் பிறந்தவர். தம் வாழ்வில் தாம் பார்த்த ஒரு சம்பவத்தை நாடகமாக 'அந்தமான் கைதி' எனும் தலைப்பில் எழுதி, அதன் மூலம் சிறு வயதிலேயே நாடக உலகில் நுழைந் தவர். டி.கே.எஸ்.ஸிடம் பெற்றுக் கொண்ட நாடகப்பிரதியை அச்சிட்டு, பிறகு அதே டி.கே.எஸ். குழுவினரால் மேடையேற் றப்பட்ட 'அந்தமான் கைதி' சினிமாவா கவும் எடுக்கப்பட் டது தனிக்கதை.

கு.சா.கி., 1952-ல் தமது திரையுலகப் பாட்டுப் பயணத்தைத் தொடங்கினார். மூன்றாம் வகுப்புப் பரீட்சை எழுதி, அதன் முடிவு தெரியு முன்பே நடிக்க ஆசைப்பட்டு வீட்டை விட்டு ஓடிவந்து 'பாய்ஸ்' நாடக கம்பெனி யில் சேர்ந்திருக்கிறார். ஒரு கட்டத்தில் நாடக வாழ்வு அலுத்துப் போய், புதுக் கோட்டையில் படக்கடையும், பதிப் பகமும் வைத்திருக்கிறார்.

'அஞ்சு ரூபா நோட்டை  
கொஞ்சம் முன்னே மாத்தி  
மிச்சமில்லே - காசு  
மிச்சமில்லே  
கத்திரிக்கா வெலகூட  
கட்டு மீறலாச்சி  
காலங் கெட்டுப் போச்சு' என்று

'அந்தமான் கைதி'யில் தொடங்கிய அவரின் பாட்டுச் சாட்டை, ஏறத்தாழ 750 முறைக்கு மேல் சுழற்றப்பட்டது. 'காணிக்கை' என்ற நாடகத்துக்காக அவர் எழுதிய 'குற்றம் புரிந்தவன் வாழ்க்கையில்' பாடல், பின்னாளில் 'இரத்தக் கண்ணீர்' படத்தில் பயன்படுத்தப்பட்டது.

'அவன் அமரன்' படத்தில் 'ஏழையைக் கோழையென்று நினைக்குது', 'ராஜராஜன்' படத்தில் 'நிலவோடு வான்முகில் விளை யாடுதே', 'அம்பிகாபதி'யில் 'அந்தோ பரிதாபம்', 'தங்கமலை ரகசியம்' படத்தில் 'வண்டு புதுமலரைத் தேடி' என கு.சா.கியின் பாடல் பட்டியலை விரித்துக் கொண்டே போகலாம். என்னிறைந்த பாடல்களை யாத்தவருக்கு இசையார் வமும் இருந்திருக்கிறது. பாடலை எழுதி அதற்கேற்ப தாமே மெட்டமைத்தும் தந்திருக்கிறார். திரையிசை மேதைகளான சுதர்சனம், கி.ராமநாதன், கே.வி.மகாதேவன் ஆகியோர் இவரை மெட்டுக்காகவும் பாராட்டிய செய்திகள் பாடலாசிரியனுக்குத் தேவை யான இசையறிவை தெரிவிக்கின்றன.

'ராஜராஜன்' திரைப்படத்தின் படப் பிடிப்பு நடந்துகொண்டிருந்த நேரம். திருவனந்தபுரத்தில் இருந்த கே.வி.மகா தேவன், கு.சா.கி.யிடம் தொலைபேசியில் தொடர்புகொண்டு உடனே பாடலெழுதி ஒலிப்பதிவு செய்து அனுப்பக் கேட்டிருக் கிறார். அப்படி அவசர அவசரமாக எழுதி மெட்டமைத்து மாலைக்குள் ஒலிப் பதிவு செய்து அனுப்பப்பட்ட பாடல் தான் 'நிலவோடு வான் முகில்' பாடல்.



14

சினிமாப் பாடலாசிரியர்க்கும் கவிஞனுக்குமுள்ள வித்தியாசம் இதுதான். இன்றே, இப்பொழுதே, இங்கேயே எனும் அவசரகதியில் பாடலைப் பற்பசை போல் பிதுக்க வேண்டிய நிலை பாடலாசிரியனுக்கு. ஆனால், கவிஞனுக்கு அவ்வாறில்லை. பூரண மனத் திருப்தி வரும்வரை கவிஞனால் இயங்க முடியும். எந்த வரையறைக்குள்ளும் அடங்கிக் கிடக்க வேண்டிய அவசியமில்லை.

'அந்தக் காலத்தில் இருந்தே எனக்கு சினிமா துறை மீது மரியாதை இருந்ததில்லை. பி.யு.சின்னப்பா வற்புறுத்தித் தான் என்னை எழுத வச்சார். இப்ப மியூசிக் டைரக்டர் தமக்கு யார் வேணுமின்னு நினைக்கிறாரோ அவருக்குத் திறமை, புலமை எதுவும் இல்லாட்டியும் கவிஞனாக்கிவிட முடியும். அதனால்தான் பாடல்கள் நிக்கிறதில்லை' என 1987-ல் ஒரு வார இதழுக்குப் பேட்டியளித்த கு.சா.கி., தமிழிலக்கிய வரலாற்றையும் தமிழ் நாடக வரலாற்றையும் நன்கு அறிந்தவர். துறை சார்ந்த தெளிவு உடையோரால் மாத்திரமே அத்துறை பொலிவும் புதுமையும் பெறுகிறது என மீண்டும் சொல்லத் தேவையில்லை.

**புலன் ஐந்தின் ஆட்டம்தான் மனித வாழ்க்கையா...! செம அட்வைஸ்தான்!**

'ஆழி நீங்கி வானின்
மீது
ஆதவன்
எழுந்தான் வாரீர்
கோழி உலகெல்லாம் வாழ்கவென்று
கூவி யழைக்குது கேளீர்' என்ற

கு.சா.கி.யின் வரிகளை என்.எஸ்.கே. தமது 'நல்லதம்பி' படத்தில் (1949) தொகையறாவாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்.

**யுகபாரதி**

கவியின்பம் (1945), பருவ மழை (1985), தமிழ் நாடக வரலாறு ஆகியன கு.சா.கியின் நூல்கள்.

'தமிழ் நாடக வரலாறு' மிகச் சிறந்த நாடகப் பதிவு நூல். 19-ம் நூற்றாண்டில் தமிழ் நாடக நடிகர்கள் ஒழுக்க மற்றவர்களாகவும் அத னால் சமுதாயம் அவர் களை வெறுத்து ஒதுக்கிய தாகவும் குறிப்பிடும் கு.சா.கி., நூலில் பல இடங் களில் சுவையான சம் பவங்களைக் கோத்து வரலாற்று நூலுக்கு நேரும் வாசிப்பு சோர்வைத் தவிர்த்திருக்கிறார்.

சொல்ல வருவதை சுவைபட விளக்க மாகக் குறிக்கும் கு.சா.கி., 1943-ல் புதுக் கோட்டை சமஸ்தான காங்கிரஸ் அமைப்பாளராக இருந்து, பெரும் போராட்டம் நிகழ்த்தி மன்னராட்சியை மக்களாட்சியாக்கவும் உழைத்தவர்.

சக்ரவர்த்தி திருமகளில் 'சொல் லாலே விளக்கத் தெரி யல', ஒன்றே குலம் படத்தில் 'பொன்னி யம்மா காவிரித் தாயே', சதி அனுசுயாவில் 'அகம் பாவம் கொள்ளாதேடா மனிதா', முல்லைவனம் படத்தில் 'நினைத்தாலே இனிக்குதடி' ஆகிய பாடல்களைக் கேட்கை யில் பி.யு.சின்னப்பா வற்புறுத்தி எழுத வைத் ததற்கான காரணத்தை விளங்கிக்கொள்ள முடி கிறது. நாடக ஆக்கத்தில் கூடுதல் கவனம் செலுத்திய கு.சா.கி., தனிக் கவிதைகளிலும் தமது தனித்துவத்தை நிரூபித்திருக்கிறார்.

'கொட்டுகின்ற குளிர்
மழையும்
பனியும் காற்றும்
கொடுவெயிலுங் கருதாது
உழைத்த வுத்துப்
பட்டினியால் வயிறொடுங்கி
ஒட்டிப்போன
பாட்டாளி உழைப்பில் வரும்
பயனையெல்லாம்
எட்டுணையும் கருணையின்றித்
தின்று புரித்து
பட்டைவெறும்
கட்டையெனும்
உணர்ச்சியற்ற
பணக்காரன்
உள்ளமிதை
உணர்வதென்றோ?'

- என அடி ஆழத்தில் புதைந்து கொண்டி ருக்கும் உழைப்பாளர் நலனை உருக்குத் தமிழில் உணர்த்தியிருக்கிறார்.

நாகர்கோவிலில் ஒருமுறை டி.கே.எஸ். சகோதரர்களின் 'ஔவை யார்' நாடகம் நடக்க, அதில் ஔவையாக வேடமேற்ற டி.கே. சண்முகம் அவர்கள் 'பெருமை கொள்வாய் தமிழா' பாடலை எழுதி

**ஊற்றாய் மிளிர்ந்த பாடலுக்கு நிலா சாட்சி... நேயம் சாட்சி!**


• கு.சா.கி

## சாதனை ராஜா!

ஒரு இசையமைப்பாளரின் இசையில் அதிகபட்சம் எத்தனை பாடல்கள் ஒலிப்பதிவு செய்யப்பட்டலாம்? எட்டு, ஒன்பது, பத்து...? ஆனால் முப்பத்தாறு பாடல்களை சமீபத்தில் 'அஜந்தா' படத்துக்காக ஒலிப்பதிவு செய்து, சாதனை படைத்திருக்கிறார் இசைஞானி இளையராஜா. எல்லோரா மூவி க்ளப் (INC) என்னும் நிறுவனம்தான் இப்படத்தைத் தயாரிக்கின்றது. கதை, திரைக்கதை, வசனமெழுதி இயக்குகிறார் கதாக. திருமாவளவன். தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய மொழிகளில் இதனைத் தயாரிக்கிறார் ராஜ்பா ரவிசங்கர். 'கதை தந்த தைரியமே என்னை நான்கு மொழிகளில் தயாரிக்க வைத்து, ஒரே சமயத்தில் படத்தை ரிலீஸ் செய்யத்

தூண்டியுள்ளது' என்கிறார் இவர். 'அஜந்தா' தமிழ்ப் படத்தில் ரமணா கதாநாயகனாக நடிக்க, வந்தனாகுப்தா நாயகியாகிறார். கன்னடப் பதிப்பில், ஒரு திரைப்பட நிறுவனத்தில் ஆபீஸ் பையனாக வேலை பார்த்துக்கொண்டிருந்த வெங்கடேஷ் என்பவரை கதாநாயகனாக்கியிருக்கிறார்கள்.

"இளையராஜா, மூன்று மாதங்கள் இரவு பகல் பாராமல் பணியாற்றி, இப்படத்துக்கான பாடல் பதிவினை செய்து கொடுத்திருக்கிறார். என்றென்றும் மறக்க முடியாத ஒரு இசைச் சாதனையை எங்கள் படத்தின் மூலம் அவர் புரிந்திருப்பதில் இரட்டிப்பு மகிழ்ச்சி" என்கிறார்கள் தயாரிப்பாளரும் இயக்குநரும் கோரஸாக.

**- காயத்ரி**



• இயக்குநர் கதாக. திருமாவளவன் மற்றும் தயாரிப்பாளர் ராஜ்பா ரவிசங்கருடன் ராஜா...

யது கு.சா.கி. என கவிமணியிடம் அறிமுகம் செய்து வைக்க, கு.சா.கி.யின் கைகளை கண்ணில் ஒற்றிக் கொண்டாராம். அதேபோல தமிழ்த் தென்றல் திரு.வி.க. - நாங்களெல்லாம் 'படு ஞாயிறு'; நீங்களோ 'எழு ஞாயிறு' என வியந்து பாராட்டியிருக்கிறார்.

பாராட்டுகள், பரிசுகள், பதக்கங்கள் யாவற்றையும்விட எழுத்து பெருமை கொள்ளத்தக்கது. நடிகர், நாடகாசிரியர், வசனகர்த்தா, பாடலாசிரியர், அரசியல் வாதி எனப் பன்முகமுடைய கு.சா.கி.யின் கவிதை உலகம் பரந்து விரிந்தது.

'பூதங்கள் ஐந்தாலே
உலகின் சேர்க்கை
புலன் ஐந்தின் ஆட்டம்தான்
மனிதன் வாழ்க்கை
நாதங்கள் ஒன்றுபட்டு
ஓர் உருவமாகி
நல்லுயிர்ப்புக் கொண்டிடுங்கால்
பிறப்பென்கிறோம்.'

- வேத, உபநிடத விஷயங்களையும் எளிமையான வார்த்தையில் வடித்துக் கொடுத்த கு.சா.கி, கவிதைக்கு விளக்கம் சொல்லும் அழகே அழகு.

'புரட்சியின்றி உணர்ச்சியின்றிப்
புதுமையற்ற சொல்லடுக்கு
அரட்டுவது கவிதையில்லை
அவற்றாலோர் பயனுமில்லை'

என்கிறார்.

கவிதை என்ற தேடலுக்குள் விழுந்து விழுந்து தொலைந்துபோன படைப்பு மனம், கு.சா.கி. போன்றோரால் அகன்ற இதயத்தில் அகப்படும் சூரியனாகிறது. சூரிய வெளிச்சம் ஒவ்வொரு நாளும் புதிய வெளிச்சத்தையே தருகிறது.

புதுக்கோட்டை போராட்டத்தில் கலந்துகொண்டபோது போலீஸ் கைது செய்து அடர்ந்த காடுகளில் இறக்கிவிட்டதாக கு.சா.கி. நினைவுகளில் கூறுகிறார். பாட்டென்னும் அடர்ந்த காட்டுக்குள் நம்மைக் கைது செய்த இவரோ, காற்று நாற்றங்காலில் கற்பனைகளை நடவு செய்தவர். ஊற்றாய் மிளிர்ந்த இவருடைய ஒவ்வொரு பாடலுக்கும் நிலா சாட்சி, நேயம் சாட்சி, நின்று நிதானிக்கும் இதயம் சாட்சி.

(காற்று வீசும்)

வங்கிகள் அரசுக்குச் சொந்தமான பிறகு, மக்களுக்கு அரசு என்னென்ன செய்ய வேண்டுமோ அவற்றில் சில வற்றையாவது செய்ய வேண்டும். அது தான் வங்கிகள் நாட்டுடைமை ஆக்கப் பட்டதன் நோக்கம். அந்த வகையில், நூற்றாண்டு கண்ட பாங்க் ஆஃப் இந்தியா என்ன செய்திருக்கிறது என்று பொது மேலாளர் டி.கிருஷ்ணமூர்த்தியிடம் கேட்டோம்...




# வங்கி ஊழியர்கள்

"கல்வியறிவு முகாம்கள், கிராம சுகாதாரம் அனுசரித்தல், இயற்கை உரம் மற்றும், சூரிய வெப்ப சக்தியை உபயோகித்தல், எரிவாயு இணைப்புகள் தருதல் என்று பல பணிகள் தொடர்வதோடு நாக்பூர், வார்தா மாவட்டங்களில் மழைநீர் சேமிப்புத் திட்டங்களுக்குப் பெரிய அளவில் உதவி வருகிறோம்.

விவசாயத்துக்கு நீர் மிக அவசியம். இரண்டு மழைகளுக்கு இடையே நீண்ட இடைவெளி இருந்தால், விவசாயிகள் பயிர்களை இழந்துவிடுகிறார்கள். இப்போது 450 குளங்களுக்கு நிதி உதவி வழங்கியிருக்கிறோம். நிலத்தடி நீரும் அதிகரித்திருக்கிறது. ஒவ்வொரு கிணற்றுக்கும் ரூ.25,000 முதல் ரூ.30,000 வரை கடனுதவி வழங்கியிருக்கிறோம். இதில் கிடைத்த மீன்வளத்தைப் பயன்படுத்தி, முதல் ஈட்டிலேயே ரூ.30,000 சம்பாதித்து, விவசாயிகள் ஒரே தவணையில் வங்கிக் கடனை அடைத்துவிட்டார்கள். மழைநீர் சேமிப்பு உத்தி வெற்றி அடைந்திருப்பதால், விதர்பா பகுதியில் மட்டும் 1000 திட்டங்களுக்கும், நாடு முழுக்க 2000 திட்டங்களுக்கும் இந்த ஆண்டு கடனுதவி அளிக்க இருக்கிறோம். 'நாட்டிலேயே இது பிரமாதமான திட்டம்' என்று நபார்டு வங்கி பாராட்டி இருக்கிறது."

**தமிழ்நாட்டில் புதிதாக என்ன திட்டம் கொண்டு வந்தீர்கள்?**

"காரைக்குடியில் நகை செய்யும் கலைஞர்களுக்கு ஸ்டார் தங்க கவிதா திட்டத்தை அறிமுகப்படுத்தி இருக்கிறோம். தங்க நகைகள், குறிப்பாக வைரம் பதித்த தங்க நகைகளின் வேலைப்பாடு இங்கே பெயர் பெற்ற தொழில். இதற்கு அதிக அளவு தங்கம் தேவைப்படும். ஆனால் SIDBI என்னும் சிறுதொழில் மேம்பாட்டுக் கழகம், இதே பாரம்பரிய முறையில் நகைகள் செய்யக் கண்டுபிடித்திருக்கும் ஹாலோ டைப் முறையில், செய்தால் மூன்றில் ஒரு பங்கு தங்கம் மட்டுமே போதுமானது. 'ஸிட்பி'யே தங்க நகைக் கலைஞர்களுக்கு மும்பையிலும், சூரத்திலும் இதற்கான பயிற்சிக்கு ஏற்பாடு செய்யும். இந்த நகைக் கலைஞர்கள், தனியாரிடம் எக்கச்சக்க வட்டி கொடுத்துத்தான் கடன் பெறுகிறார்கள். எனவே தரமான தங்கம் நேரடியாகக் கிடைக்கவும், இவர்கள் அதிக வட்டிச் சுமையால் தவிக்காமலும் இருக்க, இந்தியாவிலேயே முதன்முதலாக, அவர்களுக்கு நல்ல தங்கத்தை நேரிடையாகக் கொடுத்துவிடுகிறோம். ஐந்து லட்ச ரூபாய் வரை தங்கம் பெற வசதி உண்டு. ஆறு வருடங்களில் திருப்பிச் செலுத்தலாம்.

இது மட்டுமல்ல... அவர்கள் உருவாக்கும் நகைகளை வைத்து எக்ஸிபிஷன்கள் நடத்தி, அவர்கள் திறமையை வெளியுலகுக்கு வெளிச்சம் போட்டுக் காட்டுகிறோம். தங்க நகைக் கலைஞர்கள் என்ற நிலையிலிருந்து தங்க நகை வணிகர்களாகவும் உயர இது மிகச் சிறந்த வழி!"



**"இந்த ஆண்டு நாடு முழுவதும் 2000 திட்டங்களுக்குக் கடன் உதவி அளிக்க இருக்கிறது பாங்க் ஆஃப் இந்தியா"**

**உடல் ஊனமுற்றோருக்காக நீங்கள் என்ன செய்திருக்கிறீர்கள்?**

"இந்த விஷயத்தில் ம.பி. இந்தோரிலுள்ள விஜயநகர் கிளையில் ஒரு புதிய சரித்திரமே படைத்தோம். காது கேளாத - வாய் பேசாத இளைஞர்கள், ஆனந்த் சர்வீஸ் சொஸைட்டியில் பயிற்சி பெற்று வருகிறார்கள். இவர்களில் நாலைந்து பேர் எங்கள் வங்கியில் கணக்குத் தொடங்க விரும்பினார்கள். ஆரம்பத்தில் இவர்கள் கேட்பதைப் புரிந்துகொள்ள எங்கள் ஊழியர்கள் சற்றுத் தடுமாறினார்கள். ஆனால் மெள்ள மெள்ள அவர்களுடைய சைகை மொழியைப் புரிந்துகொள்ளத் தொடங்கினார்

# கற்ற சைகை மொழி!

கள். இந்த நாலைந்து பேர் எண்ணிக்கை பிறகு எழுபதாயிற்று. இவர்களுக்குச் சிறப்பான முறையில் சேவை செய்ய விரும்பிய வங்கிக் கிளை ஊழியர்கள், சர்வீஸ் சென்டரின் இயக்குநரிடம் தங்களுக்குச் சைகை மொழி கற்பிக்க வேண்டுகோள் விடுத்தார்கள். இப்போது அதைக் கற்றுக்கொண்டு பேசுவதால் அந்த முகங்களில் ஆனந்தம்! இப்போது அவர்கள் ஏ.டி.எம். கார்டுகளைக்கூட உபயோகிக்கத் தொடங்கிவிட்டார்கள்!"

**நியாயமான கடன் தேவைப்படுபவர்கள் நகரம், கிராமம் எங்கும் இருக்கிறார்கள். ஆனால் இவர்களுக்குச் சரியான ஆலோசனைகள் கிடைப்பதில்லையே?**

"அதற்காகத்தான் 'அபய்' திட்டம் தொடங்கி இருக்கிறோம். பணத் தேவைகளைச் சமாளிப்பது, கடனில் சிக்கிக் கொண்டு திண்டாடுபவர்களுக்கு உதவுவது என்று எல்லா ஆலோசனைகளையும் தருகிறோம். இதற்கு எங்கள் வங்கியின் வாடிக்கையாளராகத் தான் இருக்க வேண்டும் என்கிற கட்டாயம் இல்லை. முன்னாள் வங்கி அதிகாரிகள், ஊழியர்கள், ஓய்வுபெற்ற அரசு அதிகாரிகள், தன்னார்வத் தொண்டர்கள் இவற்றை நடத்துவார்கள். இப்போது மும்பையில் செயல்படத் தொடங்கிவிட்டது. அடுத்த மையம் வார்தாவில். பிறகு நாட்டின் பல நகரங்களிலும் இம் மையங்கள் தொடங்கப்படும்."

**- சாருகேசி**

• மழைநீர் சேமிப்பு...





"ஐம்பது வயதுக்குப் பின்னர் பொது வாழ்க்கையில் ஈடுபட வேண்டுமென்ற எண்ணம் இருந்தது. தலைவர் கலைஞர் அவர்கள் மாநிலங்களவை உறுப்பினர் பொறுப்பைக் கொடுத்ததால் அந்தப் பணி முன் கூட்டியே துவங்கி விட்டது" என்கிறார் தினகரன் நாளிதழின் முன்னாள் உரிமையாளரான கே.பி.கே.குமரன்.

"அப்பா கே.பி.கந்தசாமி ஹாஸ்டலில் தங்கிப் படித்தவர். என்னையும் ஏதாவது போர்டிங் பள்ளியில் சேரச் சொன்னார். கொடைக்கானல், ஊட்டி என்று அலைந்துவிட்டு கடைசியில் ஏற்காடு மாண்ட்ஸ்போர்டு பள்ளியில் சேர்ந்தேன். அங்கே என் வகுப்புத் தோழர் நடிகர் விக்ரம்" என்கிறார் குமரன்.

# - கே.பி.கே.குமரன்

இவர் ஒரு கிரிக்கெட்டரும்கூட. பதினைந்து வயதுக்குக் குறைவானவர்கள் போட்டியில் தமிழகத்துக்காகவும் தெற்கு மண்டலத்துக்காகவும் விளையாடி இருக்கிறார். ஆனால், இப்போது சிறந்த கோல்ஃப் வீரராக மாறிவிட்டார். "கிரிக்கெட்டை விட்டதற்குக் காரணம் கையில் பட்ட அடிதான். மாண்ட்ஸ்போர்டில் பள்ளிப் படிப்பை முடித்த பிறகு அண்ணா பல்கலைக்கழகத்தில் பொறியியலில் மெக்கானிக்கல் படித்து முடித்தேன். அப்போதே விடுமுறை நாட்களில் 'தினகரன்' அலுவலகத்துக்குச் செல்வேன். ஒவ்வொரு பிரிவிலும் பல நாட்கள் பயிற்சி எடுத்துக்கொண்டேன். பின்னர் மேலாண்மை படிப்பதற்காக வெளி நாட்டுக்குச் சென்று விட்டேன். 1989-ல் நான் திரும்பி வரும்போது அப்பா தி.மு.க. அரசில் அமைச்சராகிவிட்டார். எனவே நான் நேரடியாக தினகரனைக் கவனித்துக் கொள்ள வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டேன். அது ஓர் உற்சாகமான அனுபவம். 1994-ல் அப்பா மறைந்தது பெரிய ஷாக். அவர் கோல்ஃப் வீரர். அவரது

## அண்ணன்-தம்பி டைரக்டர்!

இயக்குநர் அமீரின் மூன்றாவது படம் 'பருத்தி வீரன்'. 'மௌனம் பேசியதே', 'ராம்' என்று பார்த்துப் பார்த்துச் செதுக்கியவர், 'பருத்தி வீரனை' இழைத்து இழைத்து இயக்கி வருகிறார். வரும் டிசம்பர் மாதம் திரைக்கு வரவிருக்கும் இப்படத்தில் சிவகுமாரின் இரண்டாவது மகன் கார்த்திக் ஹீரோவாக அறிமுகமாகிறார். படம் முழுக்க தேனி, மதுரையைச் சுற்றியே படமாக்கப்பட்டிருக்கிறது. கிராம வாழ்க்கையை இரத்தமும் சதையுமாகப் பதிவு பண்ணி இருக்கிறார்களாம். இப்படத்தில் யாருக்கும் டப்பிங் குரல் இல்லை. விருது பெறும் நோக்கத்தோடு அனைவரும் சொந்தக் குரலிலேயே பேசியிருக்கின்றனர்.

படத்தின் தாமதத்தைப் பற்றிக் கேட்டால், 'தரமாகத் தரவேண்டுமென்பதில் கவனமாக இருப்பதால், தாமதத்தைத் தவிர்க்க முடியவில்லை" என்கிறார் அமீர். 'ராம்' படத்துக்கு எப்படி சினிமாட்டோகிராபியில் புகுந்து விளை

கோல்ஃப் செட் சும்மாதான் கிடந்தது. அதைப் பயன்படுத்தத் துவங்கி, கோல்ஃப் ஆட்டக்காரனாக மாறிவிட்டேன்'' என்கிறார் குமரன்.

'தினகரன் இல்லாத வாழ்க்கை எப்படியிருக்கிறது?' என்றால், யோசித்துப் பேசுகிறார்.

''தினகரனை விற்றதென்பது மனதுக்கு வலியைக் கொடுத்த விஷயம்தான்.



# “தினகரனை விற்றது வலி கொடுத்த விஷயம்!”

ஆனால் இப்போதிருக்கும் போட்டியில் என்னால் இலாபகரமாக நடத்த முடியவில்லை. எனவேதான் விற்க நேர்ந்தது. இருந்தும் மகிழ்ச்சியான விஷயம், 'தினகரன்' நல்ல பலமான கைகளைச் சென்றடைந்ததோடு தரமும் உயர்ந்திருப்பது தான்.''

சொந்த மாமா (சிவந்தி ஆதித்தன்) மகளைத் திருமணம் செய்து கொண்டிருக்கிறார் குமரன். இரண்டு பெண்கள். பள்ளியில் படித்துக்கொண்டிருக்கிறார்கள். பாராளுமன்ற அனுபவம் பற்றிப் பேசும்போது குமரனின் கண்கள் பரவசமடைகின்றன.

''சபையினுள் நுழையும்போதே மிகவும் பெருமிதமாக இருந்தது. தலைவருக்கு மனதுக்குள்ளேயே நன்றி சொன்னேன். பெரிய ஜனநாயக ஜாம்பவான்கள் இருக்கும் இடமாதலால், இரண்டு வார காலம் சபை நடவடிக்கைகளைக் கூர்ந்து கவனித்தேன். பின் எனது கன்னிப் பேச்சை நிகழ்த்தினேன்'' என்கிறவர், தமது கன்னிப் பேச்சாக இந்திய விவசாயிகளின் பிரச்னைகளைப் பற்றித் தான் பேசியிருக்கிறார். சமீபத்தில் இந்தியத் தூதுக் குழுவில் இடம் பெற்று ஐ.நா. சபையிலும் பேச வாய்ப்பினைப் பெற்றவர், குமரன், ''தீவிரவாத அமைப்புகளுக்குத் தவறான வழியில் பயன்படும் இணைய தளங்களைக் கட்டுப்படுத்த சட்டம் தேவை'' என்கிறார்.

பத்திரிகைத் துறை ரத்தத்திலேயே ஊறியதாயிற்றே! மீண்டும் தினசரி துவங்குவீர்களா என்றால், தீர்க்கமாகப் பதில் வருகிறது குமரனிடமிருந்து...

''அப்படி ஓர் எண்ணம் இப்போது துளியும் கிடையாது.''

**- ப்ரியன்**

படம் : **ஸ்ரீஹரி**

---

யாடினாரோ, அதற்கு மேலேயே இப்படத்தில் ராம்ஜி கலக்கியிருக்கிறாராம்!

''ப்ரியாமணி இந்தப் படத்தின் மூலம் அடுத்த கட்டத்துக்குப் போய்விடுவார்'' என்று கூறும் அமீர், ''கார்த்திக் மட்டும் சாதாரண ஆளில்லை. அவருடைய கடைசி சொட்டு உழைப்பு வரைக்கும் படத்தில் கொட்டியிருக்கிறார். வெற்றி நிச்சயம்!'' என்கிறார்.

சரி, அமீர் அடுத்து யாரை இயக்கப் போகிறார் தெரியுமா? சூர்யாவைதான்!

**- ரேவதி**



# ராசிபலன்










**மேஷம்:** ராசிநாதன் செவ்வாய் ராசிக்கு 7-ல் சஞ்சாரம் செய்வதால் எண்ணின காரியங்கள் ஈடேறும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். பணக்கஷ்டம் இருக்காது. வழக்கு வெற்றி பெறும். பூர்வீகச் சொத்து பாகப் பிரிவினை ஆகும். உத்தியோகத்தில் சம்பள உயர்வு, பணி உயர்வு கிடைக்கும். குழந்தைகளைப் பற்றிய மனக்கவலை தீரும். வியாபாரத்தில் அபிவிருத்தி ஏற்பட்டு லாபம் ஈட்டும். திருமணம் கைகூடும். சனிக்கிழமை தோறும் ஆஞ்சநேயர் வழிபாடும், வியாழன்தோறும் குரு வழிபாடும் செய்து வந்தால் நற்பலன் ஏற்படும்.

**ரிஷபம்:** ராசிநாதன் சுக்ரன் 7-ல் சஞ்சாரம் செய்வதால் திருமணக் காரியம் கைகூடும். மனச்சலனம் விலகும். கொடுக்கல், வாங்கல் நற்பலனை அளிக்கும். வழக்கு வெற்றி பெறும். உடல் ஆரோக்கியம் சீராகும். வேலைப் பளு குறையும். முடிவு பெறாத பிரச்னைகள் முடிவுக்கு வரும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். வீடு, மனை வாங்க ஏற்ற காலம். மகப்பேறு பாக்கியம் கிட்டும். ராகு / கேது வழிபாடு நலன் தரும்.

**மிதுனம்:** ராசிநாதன் புதன் ராசிக்கு 5-ல் சஞ்சாரம் செய்வதால் மனச்சலனத்தைப் போக்குவார். முயற்சி செய்யும் காரியம் வெற்றி பெறும். நீண்ட நாள் முடிவு பெறாத வழக்கு வெற்றி பெறும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். திருமணக் காரியம் கைகூடும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். குடும்ப உறவு நன்றாக இருக்கும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

**கடகம்:** ராசிநாதன் சந்திரன் ராசியில் சஞ்சாரம் செய்வதால் தைரியம், தன்னம்பிக்கை மிகுந்து காணப்படும். சுப காரியம் கைகூடும். வீடு, மனை வாங்க ஏற்ற தருணம். உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். பணக் கஷ்டம் இருக்காது. மகப்பேறு பாக்கியம் உண்டாகும். கைபொருள் மீது கவனம் தேவை. உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். உத்தியோகத்தில் உயர்வு கிட்டும். குழந்தைகளால் சந்தோஷம் கிட்டும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். புதிய தொழில் துவங்க ஏற்ற காலம். ராகு / கேது / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**சிம்மம்:** ராசிநாதன் சூரியன் ராசிக்கு 4-ல் சஞ்சாரம் செய்வதால் மிகவும் உன்னதமான காலம். எதிரிகள் சரணாகதி ஆவார்கள். கொடுக்கல், வாங்கல் நன்றாக இருக்கும். குடும்ப வழியில் விட்டுக்

தஞ்சை பரத்வாஜ்






## நடக்குமென்பார்;

கொடுத்துப் போவது நல்லது. வாக்கு வாதத்தைத் தவிர்க்கவும். தடை விலகி திருமணம் கைகூடும். வேலைப் பளு அதிகரிக்கும். மனச்சலனம் விலகும். வழக்கு வெற்றி பெறும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். ராகு / கேது / குரு / சனி வழிபாடு நற்பலன் தரும்.

**கன்னி:** ராசிநாதன் புதன் 2-ல் சஞ்சாரம் செய்வதால் நல்ல தனயோகத்தை அளிக்கும். மனத்தில் உறுதியும் தன்னம்பிக்கையும் ஏற்படும். புதிய வேலை வாய்ப்பு வந்து சேரும். மனச்சலனம் விலகும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். குடும்ப உறவு நன்றாக இருக்கும். வீடு, மனை வாங்க நல்ல தருணம். வழக்கு வெற்றி அளிக்கும். வெளிநாட்டுக்குச் செல்லும் வாய்ப்பு வந்து சேரும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் கிட்டும். திருமணக் காரியம் கைகூடும். கொடுக்கல், வாங்கல் நற்பலன் அளிக்கும். குழந்தைகளால் சந்தோஷம் ஏற்படும். குரு வழிபாடு செய்து வர நற்பலன் கிட்டும்.

**துலாம்:** ராசிநாதன் சுக்ரன் ராசிக்கு 2-ல் பிரவேசம் செய்யப் போகிறார். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். திருமணக் காரியம் கைகூடும். வழக்கு வெற்றி அளிக்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். சத்ரு தொல்லை விலகும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். குழந்தைகள் இடம் மாறிச் செல்வார்கள். சுபச் செலவு ஏற்படும். வீடு, மனை வாங்க நல்ல தருணம். நீண்ட நாள் கடன் தொல்லை தீரும். உத்தியோகத்தில் நற்பெயர் கிட்டும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். ராகு / கேது / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.



**விருச்சிகம்:** ராஜயோகமான வாரம். சுபகாரியச் செலவுகள் ஏற்படும். உத்தியோகத்தில் நல்ல உயர்வு ஏற்படும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். குழந்தைகள் பற்றிய கவலை தீரும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். வியாபாரத்தில் நல்ல லாபம் ஏற்படும். ஏககாலத்தில் பல தொழில்களைச் செய்யும் வாய்ப்பு வந்து சேரும். பணக் கஷ்டம் இருக்காது. ராகு / கேது / குரு வழிபாடு உத்தமம்.

**தனுசு:** ராசிநாதன் குரு ராசிக்கு 12-ல் சஞ்சாரம். சுபகாரியம் கைகூடும். புண்ணிய ஸ்தலம் செல்லும் வாய்ப்பு வந்து சேரும். அஷ்டமத்து சனியால் எந்தப் பாதிப்பும் இருக்காது. தெய்வபலம், ஆத்மபலம் இருக்கும். உடல் ஆரோக்கியம் சீராகும். உத்தியோகத்தில் நற்பெயர் கிட்டும். குழந்தைகள் வழியில் சுபச்செலவு வந்து சேரும். வியாபாரத்தில் நல்ல லாபம் கிட்டும். குடும்ப உறவு நன்றாக இருக்கும்.

**12.11.06 முதல் 18.11.06 வரை**

# நடக்கும்!

# பரத்வாஜ்

**● என் மகனுக்கு எப்போது திருமணம் நடக்கும்? நல்ல வரன் அமையுமா?**

**- ஆர்.கே.சுந்தரம், மதுரை**

உங்கள் மகன் ஜாதகப்படி ராகு தசை நடைபெற்று வருகிறது. வெளிநாடு சென்று வேலை பார்க்கும் யோகம் உள்ளது. முயற்சி செய்தால் உடனே கிடைக்கும். தற்பொழுது குரு பலம் வந்து இருப்பதால் திருமண முயற்சியை தொடங்க ஏற்ற காலம். பிறந்த ஊருக்கு மேற்கு தெற்கு திசையில் வடக்கு பார்த்த வீட்டில் வசிக்கும் பெண் அமைவார். உடன் பிறப்பு இருவர் உள்ள இடத்தில் வரன் அமையும். 2007-ல் திருமணம் நடக்கும்.

**● என் ஜாதகத்துக்கு எந்தக் கல் அணிந்தால் அதிர்ஷ்டம் தரும்? விரைவில் திருமணம் நடக்க என்ன**

வீடு, மனை வாங்க நல்ல காலம். குரு / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**மகரம்:** ராசிநாதன் ராசிக்கு 7-ல் சஞ்சாரம் நற்பலனை அளிக்கும். திருமணக் காரியம் கைகூடும். கொடுக்கல், வாங்கலில் எச்சரிக்கை தேவை. கணவன் - மனைவி விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. கை பொருள் மீது கவனம் தேவை. வாகனத்தில் செல்லும்போது உஷார். உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. வீடு, மனை வாங்க நல்ல தருணம். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். உத்யோகத்தில் நற்பெயர் ஏற்படும். கல்வியில் கவனம் செலுத்தவும். ராகு / கேது / சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**கும்பம்:** ராசிநாதன் 6-ல் பிரவேசம் செய்கிறார். இதனால் எதிர்ப்பு, தொல்லை விலகும். நல்ல வேலைவாய்ப்பு கிட்டும். வெளிநாட்டுக்குச் செல்லும் வாய்ப்பு வந்து சேரும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். பணக்கஷ்டம் இருக்காது. சுபச்செலவு ஏற்படும். வீடு, மனை வாங்க நல்ல தருணம். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். சத்ரு தொல்லை ஒழியும். கல்வி வளம் மேலோங்கும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் கிட்டும். திருமணக் காரியம் கைகூடும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் கிட்டும். ராகு / கேது / குரு வழிபாடு நற்பலன் தரும்.

**மீனம்:** ராசிநாதன் குரு பகவான் ராசிக்கு 9-ல் சஞ்சாரம் செய்வதால் சௌபாக்கியம் ஏற்படும். வெளிநாட்டுப் பிரயாண வாய்ப்பு வந்து சேரும். மனச் சலனம் விலகும். கணவன்- மனைவி உறவு நன்றாக இருக்கும். பணக்கஷ்டம் இருக்காது. திருமணக் காரியம் கைகூடும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் உண்டு. உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். செலவுகள் சுபமானதாக இருக்கும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். உத்தியோகத்தில் நற்பெயர் கிட்டும். கல்வி வளம் மேலோங்கும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். மகான்களின் சந்திப்பு கிட்டும். ஆஞ்சநேயரை வழிபட்டால், நன்மை உண்டாகும். ○

# பதில்கள்...

**செய்ய வேண்டும்!**

**என் தங்கைக்கு எந்தக் கல் வேண்டும்?**

**- எஸ்.கோமதி, சென்னை - 7**

தங்கள் ஜாதகத்துக்கு கனக புஷ்பராகம் மோதிரம் அணிய வேண்டும். தற்பொழுது திருமண காலம் ஆரம்பம். 37வயதில் திருமணம் நடக்கும். தங்கையின் ஜாதகத்துக்கு மாணிக்கக் (சிவப்பு) கல் அணிய வேண்டும்.

**● என் அக்கா மகனுக்கு எப்போது திருமணம் நடக்கும்?**

**- அனிதா சுப்ரமணியம், சென்னை - 24**

உங்கள் அக்கா மகனுக்கு சர்ப்ப தோஷம் உள்ளது. சர்ப்ப தோஷமுள்ள வரனாகப் பார்க்கவும். 2007-ல் திருமணம் நடக்கும். பிறந்த ஊருக்கு மேற்கு தெற்கு திசையில், உடன்பிறப்பு இருவர் உள்ள இடத்தில், படித்த வரன் அமையும்.

# ஹா...ஹா...

# தலைவருக்கு ஜே!

''ஊழல் வழக்குல 'உள்ள' இருக்குற நம்ம தலைவரால ஜெயில்ல பிரச்னையாமே?''

''ஆமா, ஜெயிலரோட பேச்சு திருப்தியளிக்கலைன்னு சொல்லி 'வெளிநடப்பு' செய்ய ஆரம்பிச்சுட்டாராம்.''

- ஆனந்தி

''தலைவர் விட்ட அறிக்கையால் பிரச்னையாமே!''

''ஆமாம், ஞாபக மறதியாய் நம்ம கட்சியைத் தாக்கியே அறிக்கை விட்டுத் தொலைச்சுட்டார்!''

- அனன்யா

''தொண்டர்கள் பட்டாசு வெடிச்சு கொண்டாடறாங்களே... என்னவாம்?''

''தலைவர் 'நூறாவது' முறையா கட்சித் தாவியிருக்காராம்!''

- சுமுதி எஸ்.சேதுராமன்

''எந்தக் கட்சியும் தன்னோட கூட்டணியில் சேர்த்துக்காததுனால நம்ம தலைவரு ரொம்ப அப்செட் ஆயிட்டாரு.''

''என்ன சொல்றாரு?''

''புயல் சின்னம் எந்தக் கட்சியோடதுன்னு கேட்கிறாருன்னா பாரேன்!''

- ஆனந்தி

# பிடிவாதம்!

ஆகாஷின் கண்களில் உச்சமான ஆத்திரம் தாண்டவமாடியது. உதடுகள் துடித்துக் கொண்டிருந்தன. விரல்களில் சிகரெட் புகைந்து கொண்டிருந்தது.

அவன் எதிரில் நின்ற கஜா என்கிற ரவுடி, பான்பராக்கைக் குதப்பிக் கொண்டிருந்தான்.

"குமரனோட கல்யாணம் நடக்கக் கூடாது. என்ன செய்யப் போறே கஜா."

"குமரன் உசுரோட இருந்தாத்தானே கல்யாணம் நடக்கும்? அம்பதடி தூரத்திலேர்ந்து ஒரு மில்லி மீட்டர் பிசகாம என்னால சுட முடியும் சார். கைவசம் துப்பாக்கி ரெடியா இருக்கு, பாக்கறீங்களா?"

"நோ! அவன் சாகக்கூடாது! சாகறது ஒரு நிமிஷ வலி! அவனுக்கு ஆயுள் பூரா வலிக்கணும்! அவமானத்துல துடிக்கணும். பூஜா, குமரன் காதலை ஒரே ஒரு போட்டோதான் கலைச்சது! அந்த நெகடிவ் இப்பவும் என்கிட்டதான் இருக்கு. இந்தக் கல்யாணத்தையும் அந்த போட்டோவே நிறுத்திடும்."

"உறுதியாச் சொல்ல முடியுமா சார்?"

"குமரன் கல்யாணம் செய்துக்கறதா இருக்கற மஞ்சரி ஒரு கிராமத்துப் பொண்ணு. தன் புருஷன் நல்லவனா, யோக்யமா இருக்கணும்னுதான் எவளும் விரும்புவா. சிங்கப்பூர்ல உன் புருஷன் எப்படி நடந்துக்கிட்டான்னு தெரிஞ்சிக்கோன்னு அவகிட்ட போட்டோ கொடுத்தாப் போதும்... அது அணுகுண்டா வெடிச்சிடும்; கல்யாணம் நின்னுடும்."

"எனக்கு நம்பிக்கை இல்லை சார்."

"ஏன்?"

"குமரன் பெரிய கோடீஸ்வரன். தங்கத் தோட்டத்தோட ஒரே வாரிசு. பெரிய இடம்னா இதெல்லாம் சகஜம்னு அவ இந்த விவகாரத்தைப் பெரிசு பண்ணாம தாலி கட்டிக்கிட்டான்னா?"

ஆகாஷ் நெற்றியைச் சுருக்கி யோசித்தான்.

"கரெக்ட்! அவ பணத்துக்கு மயங்கினவளா இருந்தா இதைப் பெருசா எடுத்துக்காம இருக்கறதுக்கு வாய்ப்பு இருக்கு!"

"கல்யாணப் பொண்ணைக் கடத்தி ரெண்டு நாள் நம்ம கஸ்டடில வெச்சிருக்கலாம்."

"அப்புறம்?"

"அப்புறம்... திரும்ப விட்டுட முடியாது. ஆபத்து! அதனால... போதை ஊசி போட்டு மும்பைல வித்துட்டா அவனுங்க தொழிலுக்குப் பழக்கிடுவாங்க சார். பொண்ணு அம்சமா இருந்தா விலையைக் கூட்டிக் கேக்கலாம்."

"அதெல்லாம் நீ பார்த்துக்கோ கஜா. எக்காரணம் கொண்டும்..."

"உங்க பேர் எப்பேர்ப்பட்ட சூழ்நிலையிலயும் வெளில வராது."

"ரைட்டு. இப்ப நீ இருக்கிறது பெங்களூர்ல; நாளைக்குக் காலைல பாண்டிச்சேரில கல்யாணம். எப்போ போவே... எப்படிச் செய்வே.. டைம் இருக்கா?"

கஜா அறையின் மூலையில் இருந்த வாஷ் பேசினில் பான்பராக்கைத் துப்பி வாயைக் கொப்புளித்துவிட்டுத் திரும்பி வந்து தண்ணீர் குடித்தான்.

"அதெல்லாம் ஒரு பிரச்னையும்







16



இல்லை. எனக்கு எங்கயும் கனெக்ஷன் இருக்கு சார். பாண்டிச்சேரில விஷ்வான்னு நம்மாளு ஒருத்தன் இருக்கான். போன் போட்டுத் தகவல் சொன்னா போதும். கில்லி மாதிரி வேலை செய்வான் சார், என்ன, இறங்கிடலாமா?"

"ரைட்டு இறங்கிடு. நீ போடப்போற எல்லா திட்டமும் எனக்குத் தெரியணும் கஜா."

"இதோ இப்பவே விஷ்வாகிட்ட பேசிட்டு பூரா பிளானையும் உங்ககிட்ட சொல்லிடறேன். முதல்ல எனக்கு சென்னைக்கு ஒரு ஃப்ளைட் டிக்கெட் புக் பண்ணுங்க சார்" என்றான் கஜா.

**பா**ண்டிச்சேரி ஜிப்மர் மருத்துவமனை அருகில் விக்டோரியா காலனியில் ஒரு தனி வீட்டின் மாடியில்...

"டேய் மாலிக், ஒரே ஒரு சீட்டு போட்டுத் தொலைடா!"

"உனக்கு ஏழு கிளாவர் வேணும் விஷ்வா. தெரியுமே... போட்டா முடிச்சிடுவே... ஆனா நான் ஃபுல்லு! இரு; நான் ஸேஃப் ஆயிக்கிறேன்."

"அட... பரதேசி! உன் சீட்டை மட்டும் பார்த்து ஆடுடா!"

"நான் ஒண்ணும் உன் சீட்டைப் பாக்கலை. நீ எடுக்கறதையும், டிஸ்கார்ட் பண்றதையும் வெச்சி சும்மாதான் சொன்னேன். ஏழு கிளாவர்தான் வேணுமா?"

"ஸ்பீக்கர் வெச்சு சொல்லுடா, நாயே!"



இவர்கள் சண்டைக்கு நடுவில் பாண்டி கார்ட் மடக்கி ஆட்டத்தை முடிக்க, மாலிக், விஷ்வா இருவருமே ரம்மி இல்லாமல் ஃபுல் கொடுத்தார்கள்.

பாயிண்ட் எழுதிக்கொண்டிருந்த வேதா, ஸ்கோர் ஷீட்டில் கூட்டிப் போட்டு, "விஷ்வா... நீ அவுட்டு!" என்றான்.

"என்னடா, ஹையஸ்ட்டு?"

"இருநூத்தித் தொண்ணூறு!"

"ரீஜாயின் பண்றேன். எனக்கும் போடு!"

"வேணாம் விஷ்வா! ரிஸ்க்கு! ஒரு ஸ்கூட் விடலாம். அப்புறம் கம்பெல்!"

பட்டுக்கோட்டை பிரபாகர்

"டேய்.. கேட் பிடிக்கிறேன் பாருங்கடா. எல்லாரும் பார்டர்லதான் நிக்கறீங்க."

"எனக்கென்ன.. சொல்லிட்டேன்... உன் இஷ்டம். சரி, காசை எடு!"

விஷ்வா எழுந்து அறையில் மாட்டியிருந்த தன் வேறு சட்டைகளில் கைவிட்டுத் துழாவி நான்கு நூறு ரூபாய் நோட்டுகளை எடுத்து வந்து களத்தில் போட்டான்.

"மாலிக்.. ஒரு நூறு ரூபா போடுடா... கணக்கு வெச்சிக்க.."

"விஷ்வா.. ஏற்கெனவே ஒரு நானூத்திச் சொச்சம் கணக்கு இருக்கு."

"அத்தோட இதையும் சேர்த்துக்க. தர்றேன்றன்ல..."

"ஐந்நூறு ரூபா நோட்டும், ஆயிரம் ரூபா நோட்டும் சும்மா பூந்து விளையாடுமே உங்கிட்ட... இப்ப என்ன கொஞ்ச நாளாவே.. வறட்சியா இருக்கே.."

"ம்.. சென்னைலேர்ந்து சினிமாக்காரனுங்க ஊர்வலமா வந்து சி.எம்.கிட்ட மனு கொடுத்ததுல செம எஃபெக்ட்டு. நம்ம நாலு கடைலேர்ந்தும் எல்லா சி.டி.யும் அள்ளிக்கிட்டுப் போய்ட்டானுங்கடா! ஆறு லட்சத்துக்குப் பக்கத்துல அவுட்டு..."

"அதானே பாத்தேன். இப்படில்லாம் பஞ்சப் பாட்டு பாட மாட்டியே..."

விஷ்வா தன் கார்டுகளை அடுக்கிக் கொண்டிருந்தபோது அவனது செல்போன் ஒலித்தது. கஜா என்று பெயர் பார்த்ததும் முகம் பிரகாசம் அடைந்தது. கார்டுகளும் சுகமில்லை. பதின்மூன்று கார்டுகளில் நாலு டபுள்ஸ்; மற்றவை உதிரிகள். ஜோக்கர் இல்லை.

"நான் ஸ்கூட்."

விஷ்வா எழுந்து பந்தலுக்கு வெளியே மொட்டை மாடியின் ஓரத்துக்கு வந்து செல்போனைக் காதில் வைத்தான்.

"கஜா, சொல்லு!"

"விஷ்வா, பாண்டிலதான் இருக்கியா?"

"ஆமாம்."

"ஃப்ரீயா இருக்கியா? ஒரு வேலை!"

"காய்ஞ்சி கிடக்கேன். சரியான நேரத்துல கூப்புடறே. சொல்லு; என்ன மேட்டர்?"

"தங்கத் தோட்டம் பையன் குமரன் தெரியுமா?"

"ராஜா வீட்டு கன்னுக்குட்டி! ஊருக்கே தெரியுமே.."

"அந்தக் கன்னுக்குட்டிக்கு நாளைக்குக் காலை கல்யாணம்."

"தெரியுமே... ஊரே திருவிழா மாதிரி இருக்கு. கல்யாண மண்டபம் இருக்கிற தெரு பூரா லைட்டு போட்டுக் கட்சி மாநாடு மாதிரி கலாட்டா பண்ணிட்டிருக்கானுங்க. அதுக்கென்ன?"

"அந்தக் கல்யாணத்தை நிறுத்தணும்."

"என்ன கஜா... என்னாச்சி?"

"பெங்களூர்ல நம்ம பார்ட்டிகூட ஏதோ உரசலு!"

"அது எதுவா வேணாலும் இருக்கட்டும். என்ன செய்யணுங்கறே?"



## மாறியது விசு'வரங்கம்'!

இனி தோளில் சிறிய துண்டோடும் கையில் மைக்கோடும் விசுவை ஜெயா டி.வி.யில் பார்க்கலாம்.

ஆம் 'அரட்டை அரங்கம்' வரும் நவம்பர் 19லிருந்து 'மக்கள் அரங்கமாய்' மாறி பிரதி ஞாயிறு காலை 11 - 12 களைகட்டவிருக்கிறது.

இந்நிகழ்ச்சியின் முதற்கட்டம், கல்லூரி மாணவர்களுக்கான கருத்தரங்கமாய் கோபிச் செட்டிப்பாளையத்தில் பிள்ளையார் சுழி போடப்பட்டிருக்கிறது.

இடம் மாறினாலும், தரம் மாறாத நிகழ்ச்சியை விசு தருவார் என்று நம்புவோமாக!

- வள்ளி

"கல்யாணப் பொண்ணைத் தூக்கணும்."

"தூக்கி?"

"சென்னைல எங்கிட்ட ஒப்படைக்கிற வரைக்கும் உன் வேலை."

"என்ன செய்யப்போறே?"

"ஊறுகாயா போட முடியும்? மும்பைகாரன் இருக்கான் கொத்திட்டுப் போறதுக்கு..."

"பொம்பளை பாவம் சும்மா விடாதுன்னு சொல்வாங்க."

"நீ செஞ்சதில்லையா?"

"செஞ்சிருக்கேன்."

"பின்னே என்ன?"

"எவ்வளவு பேசினே, கஜா?"

"அது உனக்கு எதுக்கு? உனக்கு எவ்வளவு வேணும்?"

"ஆறு லட்சம்!"

"அதென்னடா கணக்கு?"

"அதான் சமீபத்து நஷ்டம்!"

"அந்தப் பொண்ணு இப்ப எங்க தங்கிருக்குன்னு முதல்ல தெரிஞ்சிக்கணும் விஷ்வா. நம்பர் பிளேட் மாத்தின வண்டிலதான் கடத்தணும். எப்படிச் செய்யப் போறே? எப்ப செய்யப் போறே?"

"இரு, இரு! பறக்காதே! இப்பத்தானே சொன்னே. நான் யோசிக்க வேணாம்?"

"செய்றியான்னு முதல்ல சொல்லிடு!"

"கண்டிப்பா சொல்றேன்."

"பிளான் பண்ணிட்டு கூப்புடறியா?"

"சரி. பாதிப் பணம் முதல்ல வேணும் கஜா."

"அரை மணி நேரத்துல உன்னைத் தேடி அட்வான்ஸ் வரும். ஏற்பாடு பண்ணிடறேன். ஜிப்மர் பக்கத்துல அதே இடம்தானே?"

"ஆமாம். நான் பிளான் ரெடி பண்ணிட்டு கூப்புடறேன் கஜா."

போனை பாக்கெட்டில் போட்டுக் கொண்டு சிகரெட் பற்ற வைத்தான் விஷ்வா.

"பாண்டி.... இங்க வாடா!" என்றான்.

பாண்டி கையூன்றி எழுந்து விரல்களில் சொடக்கு எடுத்துக்கொண்டு அவனிடம் வந்தான்.

"ஒரு ஆம்புலன்ஸ் வண்டி உன்கிட்ட ரிப்பேருக்கு வந்து டெலிவரி ஆகாம இருக்குதில்ல?" என்றான் விஷ்வா.

*(தொடரும்)*

## வருகிறான் வீராச்சாமி!



**வி**றுவிறுவென்று வளர்ந்து வருகிறார் 'வீராச்சாமி'. டிசம்பரில் உங்களை துவம்சம் செய்யப்போகும் விஜய டி.ராஜேந்தரின் இந்தப் படம், ஒரு மெகா பட்ஜெட் படம் என்பது நீங்கள் அறிந்ததே. ஏழெட்டு செட், எக்குதப்பு கெட்டப் என கோடிகளை வாரி இறைத்திருப்பதாய் கோடம்பாக்க வட்டாரத்தில் பரபரப்பு.

வழக்கம்போலவே கதை தொடங்கி பாடல்கள் வரை டி.ஆரின் கஸ்டடியில் தான். அவரிடம் சிம்பு இயக்கம் பற்றிப் பேசினாலே டென்ஷனாகிறார்.

"சிம்பு இளைஞன், நான் கலைஞன். எனக்குப் பின் வந்த அவன் எங்கேயோ போய்விட்டான். என் லெவல் வேற, அவன் பவர் வேற" என்று 'பஞ்ச்' டயலாக் விடுகிறார். மும்தாஜோடு குத்தாட்டம் போட்ட அனுபவம் எப்படி என்றால், "அது குத்தாட்டமல்ல, தத்துவ ஆட்டம்" என்கிறவர் "ஒரு காட்சியில்கூட தொடாம, கட்டிப்பிடிக்காம அன்னிக்குக் காதலை எந்த மாதிரி இந்த டி.ஆர். அணுகினானோ, அப்படித்தான் இப்பவும் அணுகுவான். ஆனாலும் மாறிவரும் ட்ரெண்டுக்கு ஏற்ப தகுந்த மாதிரி நானும் மாறியிருக்கேன்" என்கிறார். திடீரென குரலுயர்த்தி, "இனி தப்பித்தவறிக்கூட அப்பா ரோல்ல நடிக்க மாட்டேன். ஏன்னா இளமை திரும்பி ஹீரோவாயிட்டன்ல" என்று ஒரு ஆக்ஷன் போஸ் கொடுக்கிறார்.

- விக்டர்

# ஆயிரம் சூரிய பிரகாசம்!

சுதா சேஷய்யன்

தேவர்கள் எங்கிருந்தோ வந்தவர்கள் அல்லர். தேவர்கள் - அரக்கர்கள்! இருபத்தோராம் நூற்றாண்டை விட்டுவிட்டு, நமது பழைய புராணங்கள் - கிரந்தங்கள் நமக்குச் சொல்லக்கூடியதை நினைத்துப் பார்ப்போம்...

எப்போதெல்லாம் அசுரர்கள் அதிகப் பட்டார்களோ, அப்போதெல்லாம் பகவான் அவதாரம் பண்ணினான்.

*தர்மஸம்ஸ்தாப நார்தாய ஸம்பவாமி யுகே யுகே!*

எங்கேயாவது மனிதர்களுக்காக அவதாரம் பண்ணினான் பகவான் என்று புராண - இதிகாசம் சொல்கிறதா...?

ராக்ஷஸர்கள் அதிகப்பட்டு தேவர்களுக்குத் துன்பம் கொடுத்தபோது பகவான் அவதரித்தார் என்றுதான் எல்லா கதைகளுமே சொல்கின்றன. ஒரு பக்கத்தில் ராக்ஷஸர்கள், இன்னொரு பக்கத்தில் தேவர்கள் - நடுவில் எந்த 'க்ரூப்புமே' இல்லை.

### இச்சுவை தவிர...

இன்றைக்கு ராக்ஷஸர்களும் எங்கே இருக்கிறார்கள் என்று தெரியவில்லை; தேவர்களுமே எங்கே இருக்கிறார்கள் என்று தெரியவில்லை என்கிறபோது, இரு பிரிவுகளுமே மனிதனுக்குள் கலந்து போய் விட்டன என்றுதான் அர்த்தம்!

மனிதனுக்குள்ளேயேதான் அசுரனும் உண்டு தேவனும் உண்டு. தேவர்கள், அசுரர்கள் என்று தனித்தனி இனத்தவர்கள் கிடையாது! இன்னும் சொல்லப் போனால், யாரெல்லாம் இந்தப் பூலோகத்தில் சரியான வாழ்க்கை வாழ்கிறார்களோ, அவர்களெல்லாம் தேவலோகத்துக்கு - விண்ணுலகத்துக்குப் போக முடியும் என்று சொல்வதுதான் நம்முடைய பாரம்பரியம். அந்தப் பாரம்பரியத்தில் வந்தவர்கள்தான், 'இச்சுவை தவிர யான் போய் இந்திர லோகம் ஆளும் அச்சுவை பெறினும் வேண்டேன்' என்றார்கள்...

அப்படியானால், இங்கேயிருந்து அங்கே போவதற்கு வழி இருக்கிறது என்றுதானே அர்த்தம்! அந்த வழி வேண்டாம் நான் இங்கேயே இருக்கிறேன் என்று சொன்னால், வள்ளுவர் சொன்ன மாதிரிதான் அர்த்தம்:

**வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்**
**- வானுறையும்**
**தெய்வத்துள் வைக்கப்படும்!**

இந்த பூமி வாழ்க்கையைச் சரியாக வாழ்பவர்கள் வானுலகத்துக்குப் போக முடியும் - வானுலகு என்பது ஓர் உயர் நிலை என்பதே ஆகும். ஆக தேவர்கள் என்பவர்கள் எங்கிருந்தோ வரவில்லை. மனிதர்கள் சரியாக இருக்கும்போது தேவர்களாக மாறுகிறார்கள்.

இன்னும் விளக்கமாகச் சொல்லப் போனால் மனித மனத்துக்குள்ளேதான் தேவ தன்மையும் இருக்கிறது; அசுரத் தன்மையும் இருக்கிறது!

ஒரே தந்தை காஷ்யபர். அந்த காஷ்யபருக்கு ஒரு பிரிவு குழந்தைகள் தேவர்கள்; இன்னொரு பிரிவினர் அசுரர்கள். ஒரே குடும்பம்தான். அதிலேயே இப்படி இருவிதமான பிள்ளைகள் என்றால்

என்ன அர்த்தம்?... யாரிடத்திலெல்லாம் நன்மை அதிகப்படுகிறதோ அவர்கள் தேவர்கள்; யாரிடத்தில் தீமை மிகுகிறதோ அவர்கள் அசுரர்கள்.

அப்படியானால் '**தேவ கார்ய ஸமுத்யதா**' என்பது எங்கோ இருக்கக் கூடியவர்களுக்காகச் சொன்னது அல்ல... நாங்கள் நல்லவர்களாக இருந்தால், நாங்கள் நல்ல காரியங்களை அதிகமாகச் செய்யக்கூடியவர்களாக இருந்தால், நாங்கள் தர்ம நிலையில் நிற்கக்கூடியவர் களாக இருந்தால், எங்களுடைய காரி யங்களைப் பூர்த்தி செய்து தருவதற்காக சிதக்னிகுண்ட ஸம்பூதாவானவள் - எமது சித்தமாகிற அக்னியிலிருந்து வெளிப் படுவாள்; தர்ம செயல்களை ரக்ஷிப் பதற்காக வரக்கூடியவள் அவள்.

அடுத்து வரும் நாமங்கள் ஒரு விஷயத்தைத் தெளிவாகச் சொல்கின்றன. சிதக்னி குண்ட ஸம்பூதா தேவ கார்ய ஸமுத்யதா என்று சொல்லிவிட்டு, '**உத்யத்பானு சஹஸ்ராபா**' என்று அழைக்கிறது சஹஸ்ரநாமம் : - ஆயிரம் சூரியன்கள் உதயமாகிற போது எவ்வளவு பிர காசமாக இருக் குமோ, அந்த அளவுக்குப் பிர காசிக்கக் கூடிய வள்.



## திருக்கர விசேஷங்கள்

**சதுர்பாஹு ஸமன்விதா** - இது அடுத்த நாமம். இங்கு தான் ஸ்வரூப வர்ணனை ஆரம்பிக்கிறது. சிதக்னி குண்ட ஸம்பூதா என்று சொல்கிறபோது ஸ்வரூபம் என்ன வென்று சொல்ல வில்லை. ஸ்ரீமாதா என்று சொல்கிற போதோ, ஸ்ரீ மஹாராக்ஞி என்கிற போதோ ஸ்வரூபம் என்னவென்று சொல்லவில்லை. சிம்ஹாஸனேஸ்வரி என்கிறபோதும் ஸ்வரூபம் சொல்லப்பட வில்லை. ஸ்வரூபம் எங்கே ஆரம்பிக் கிறது என்றால் '**சதுர்பாஹு ஸமன்விதா**' என்ற திருநாமத்தில்தான்! 'நான்கு திருக்கரங்களோடு இருக்கக்கூடியவள்' என்று அம்பாளை வர்ணிக்க ஆரம்பிக்கிற போது, **அவள்** திருமுகத்தில் ஆரம்பிக்க வில்லை வர்ணனை...! அவளுடைய திருக்கரங்களில்தான் ஆரம்பிக்கிறது.

நான்கு கரங்களைச் சொல்கிறபோது சதுர்பாஹு ஸமன்விதா என்று கூறி, அவளுடைய திருக்கரங்கள் எவற்றையெல் லாம் தாங்கிக் கொண்டிருக்கின்றன என்பதையும் சொல்கிறது. அம்பாள் ஸ்வரூபத்திலே ஒரு விஷயத்தைக் கவனிக் கலாம் - ராஜராஜேஸ்வரியாக இருக்கும் போதும் காமாக்ஷியாக இருக்கும்போதும் லலிதாம்பிகையாக இருக்கும்போதும் அம்பாளுக்கு நான்கு திருக்கரங்கள். நான்கு திருக்கரங்களுள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு விஷயம் இருக்கும்.

**மனிதர்களாகிய நாம் எவ்வளவுதான் சொன்னாலும், அது எங்கேயோ ஓரிடத்தில் ஒளிந்து கொண்டிருக்கும். இந்த மரண பயத்தைப் போக்கக்கூடியதுதான் அபய ஹஸ்தம்.**

## சங்கரர் சுட்டும் வித்தியாசம்!

ஆதிசங்கர பகவத்பாதர் சொல்வதை இங்கே நினைத்துப் பார்க்க வேண்டும். அம்பாளை வர்ணித்துக் கொண்டே வருகிறபோது, அவளுடைய நான்கு திருக் கரங்களைப் பற்றிச் சொல்லுவார் -

"அம்மா, உன்னுடைய நான்கு கரங்களில் ஒரு வித்தியாசம் இருக்கிறது அம்மா!" என்பார். சாதாரணமாக, ஒரு தெய்வம், தெய்வத் திருமேனி என்கிறபோது எல்லோரும் பார்க்கக்கூடியது அல்லது கவனிக்கக்கூடியது என்னவென்றால், ஒரு கரம் அபய ஹஸ்தமாகவும் ஒரு கரம் வர ஹஸ்தமாகவும் அமைந்திருக்கும். இதுதான் சாதாரணமாக அனைத்துத் தெய்வத் திருமேனிகளுக்கும் பொதுவான தோற்றம். (ஓரிரண்டு விதிவிலக்குகள் இருக்கலாம்). அதனால்தான், நாட்டியம் செய்பவர்கள் கூட, தெய்வத்தைக் காட்டும் முகமாக அபய-வர ஹஸ்தங்களை முத்திரையாகக் காட்டுவார்கள்.

அபய ஹஸ்தம் என்பது பயத்தைப் போக்கக்கூடியது. அதனால்தான் அதற்கு 'அ-பய' ஹஸ்தம் என்றே பெயர். ஒவ்வொரு மனித மனத்திலும் பயம் இருக்கும். எதற்குப் பயம் என்றால், மரணத்தைப் பற்றிய பயம்!

## மரண பயம்!

பயம் என்பது ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு காரணத்தால் ஏற்படலாம். ஒருவருக்கு இருட்டைப் பார்த்தால் பயம், ஒருவருக்குச் சுவரைப் பார்த்தால் பயம், ஒருவருக்குக் கிணற்றைப் பார்த்தால் பயம்! ஆனால் எல்லா பயங்களையும் தாண்டி அனைத்து மனிதர்களுக்கும் இருக்கக்கூடிய ஒரே பயம் மரண பயம்!

அருணகிரிநாதர் பாடுவார், "எனக்கு மரண பயம் இல்லை" என்று! "ஏனென்றால், நான் மயிலைப் பார்த்தேன். மயிலைப் பார்த்ததும் என் மரண பயம் போய்விட்டது" என்பார்.

ஆனால் மரண பயம் என்பது இல்லை என்று மனிதர்களாகிய நாம் எவ்வளவுதான் சொன்னாலும், அது எங்கேயோ ஓரிடத்தில் ஒளிந்து கொண்டிருக்கும். இந்த மரண பயத்தைப் போக்கக்கூடியது தான் அபய ஹஸ்தம்.

அம்பாளிடம் போய் 'அம்மா' என்று அவளுடைய கால்களில் விழுகிறபோது, **அவள்** அந்தப் பயத்தைப் போக்குகிறாள். பயம் போய்விட்டது என்றால், அடுத்தது என்ன நடக்கும்?

(தொடரும்)



# நீங்கள் கேட்டவை

● ஏ.மோகன்சுவாமி, கொளத்தூர்

? மீண்டும் மழை நிவாரண (கருணா) நிதி கிடைக்குமா?

! நிவாரண நிதியை அள்ளி விடுவதைக் காட்டிலும் வடிகால்களைச் சரியாக அமைத்து நிரந்தரப் பரிகாரம் காண்பதே சிறந்தது. வோட்டுப் பிடிக்கும் அரசியல்வாதி முன்னதைச் செய்வார். நாட்டு நலன் கருதும் தீர்க்கதரிசி பின்னதைச் செய்வார்.

● பி.இராஜேந்திரன், வேலாயர் அணைக்கட்டு

? டெல்லி சட்டக் கல்லூரி மாணவி பிரியதர்ஷினி கொலை வழக்கில் சந்தோஷ் சிங்குக்குத் தூக்கு தண்டனை விதிக்கப்பட்டுள்ளது. நீதிமன்றம், இந்த ஈவிரக்கமற்ற குற்றத்துக்குத் தூக்குத் தண்டனையே சரி என்று கூறியுள்ளது. தூக்குத் தண்டனையை எதிர்ப்போர் இனியேனும் திருந்துவார்களா?

! திருந்த மாட்டார்கள். கொடிய குற்றமாயினும் சந்தோஷ் சிங்குக்குத் தூக்குத் தண்டனை தரக்கூடாது என்று வாதிடுவார்கள். 'மனித உயிரைப் பறிக்க மனிதனுக்கு உரிமை இல்லை' என்பது அவர்களுடைய வாதம். அப்படியானால் பிரியதர்ஷினியை திட்டமிட்டுப் பாலியல் பலாத்காரம் செய்து கொன்ற சந்தோஷ் சிங்குக்கு யார் அந்த உரிமையைத் தந்தது என்கிற கேள்வி எழுகிறதே!

● ஜெ.செல்வராணி, மதுரை - 4

? சிக்கனத்துக்கும் கருமித்தனத்துக்கும் வித்தியாசம் உண்டா?

! சிக்கனம்-வருமானத்துக்குள் வாழ்க்கை நடத்தி அவசர காலத்துக்குச் சேமிப்பது.

கருமித்தனம் - நிறைய சம்பாதித்தும் வருமானமே இல்லாததைப்போல் அபரிமித சிக்கனத்தைக் கடைபிடிப்பது!

● எல்.இரவி, செ.புதூர்

? குடும்ப வன்முறைக்கு எதிராக பெண்களைப் பாதுகாக்கும் சட்டம் குறித்து...?

! சட்டம் மட்டுமே பாதுகாப்பை அளிக்க முடியாது. முதலாவது, அதன் உதவியை நாடும் துணிவும் அறிவும் பெண்களுக்கு இருக்க வேண்டும். இரண்டாவது, வழக்கு என்று ஏற்பட்டால் நிரூபிப்பதற்கு சாட்சியங்கள் வேண்டும்! திருமணத்துக்கு முன்பே தீர விசாரித்து அறிவதும், திருமணத்துக்குப் பிறகு இரு தரப்பினரும் விட்டுக் கொடுத்து, அன்பின் அடிப்படையில் அனுசரித்து வாழ்க்கை நடத்துவதும்தான் புத்திசாலித்தனம்.

● இரா.சக்கரபாணி, மதுரை - 7

? மது குடிப்பது தொடர்பாக எழுந்துள்ள ஜெ - விஜயகாந்த் பிரச்னை குறித்து, கருணாநிதி "பார்த்தேன், படித்தேன், ரசித்தேன்" என்று கூறியிருக்கிறாரே?

! தமது ரசனையின் தரத்தை வெளிப்படுத்தியுள்ளார்!

● ஜி.கோகுலகிருஷ்ணன், விசலூர்

? "தே.மு.தி.க. இரண்டாவது பெரிய கட்சி அல்ல; முதல் பெரிய கட்சியே நாங்கள்தான்" என்கிறாரே பண்ருட்டியார்!

● 'சிறப்பு' விமர்சனம்! ● தகாத ஆச்சர்யம்!





! அளவில் பெரிதாக இருந்தால் மக்கள் வியக்கலாம்; கொள்கைகளில் பெரிதாக இருந்தால் அறிஞர்கள் அதிசயிக்கலாம்; சாதனையில் பெரிதாகும்போதுதான் சரித்திரத்தில் சிறப்பிடம் பெற முடியும்!

● கணேச சிவப்பிரகாசம், கடலூர்

? தமிழகத்தில் உள்ளாட்சித் தேர்தல் முடிந்த சூட்டோடு சூடாக அடுத்து வரும் கூட்டுறவுச் சங்கத் தேர்தல்களைப் பற்றி...?

! இதிலும் மறைமுகமாகவேனும் கட்சி அரசியலைப் புகுத்தி, கேலிக்கூத்தாக்கிவிடும் வாய்ப்புகள் நிறையவே உள்ளன.

● ஆ.கிருஷ்ணன், சென்னை - 91 ★

? இப்போது நம் நாட்டுக்குத் தேவை இரண்டே கட்சிகள். எல்லாக் கட்சிகளையும் கலைத்துவிட்டு இரண்டு கட்சிகளை மட்டுமே உருவாக்கித் தீர வேண்டும் - இது சாத்தியமா?

❑ ரூ.100 பரிசு பெறுபவர் :
**எம்.பாஸ்கர்,**
ஹோட்டல் சங்கீத்,
30, ஏ.எம்.சி. ரோடு,
திண்டுக்கல் - 624 001

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
**ஆ.கிருஷ்ணன்,**
45பி, ஜோதிராமலிங்கம் தெரு,
மடிப்பாக்கம்,
சென்னை - 600 091.

! சாத்தியமாக்க அரசியல் சாசன மாற்றங்கள் உதவும். அவற்றுக்குக் குரல் கொடுக்க அறிஞர்கள் முன் வந்தாலும், கைகொடுக்க எந்த அரசியல்வாதியும் முன்வர மாட்டாரே!



**தராசு**

● **ஆர்.லதா, தேவூர்**

**? "சிறப்புப் பொருளாதார மண்டலத்தால் பயனடையப்போவது சில வெளிநாட்டுப் பண முதலைகளே; பாதிக்கப்படப் போவதோ நாம்" என தா.பாண்டியன் கூறியுள்ளாரே?**

! அவர் சொல்வது சரிதான். ஏனெனில், அவற்றுக்கான சலுகைகள் ஒரு கால வரம்புக்கு உட்பட்டவையல்ல; நிரந்தரமானவை. நாட்டின் இதர பகுதிகளில் தொழில் வர்த்தகம் நடத்துவோர் வஞ்சிக்கப்படுகிறார்கள். ஒரு கண்ணுக்கு வெண்ணெய்; இன்னொரு கண்ணுக்குச் சுண்ணாம்பு!

● **எம்.பாஸ்கர், திண்டுக்கல்** ❐

**? உடல் ஆரோக்கியத்துக்கு ஏற்ற குளிர்பானங்களைத் தயாரிக்க பெப்சி முடிவு செய்துள்ளதாமே?**

! சிகரெட் தயாரிக்கும் நிறுவனங்கள் இதயத்துக்கு இதமான சூரியகாந்தி எண்ணெயைத் தயாரித்து விற்கவில்லையா...? அதுபோல்தான், பரிகார புரொடக்‌ஷன்!

● **பி.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி**

**? வருமானவரிப் படிவம் ஐந்து நிமிடங்களில் பூர்த்தி செய்யும் அளவுக்கு இருக்க வேண்டும் என்று மக்கள் நினைப்பது ப.சிதம்பரத்துக்கு ஆச்சர்யமாக இருக்கிறதாமே?**

! வருமான வரிப் படிவம் மட்டுமல்ல; எந்தப் படிவமுமே அப்படித்தான் எளிமையாக, அதிக நேரத்தைக் காவு கொள்ளாததாக இருக்க வேண்டும். சிதம்பரத்தின் ஆச்சர்யம்தான் ஆச்சர்யமளிக்கிறது. அதைவிட, அவர் செலவுக் கணக்கும் கேட்பது விந்தையிலும் விந்தையாயிருக்கிறது.

● ..... ரசனை!

● வெளிப்பட்ட...





# தே.மு.தி.க. முதல் பெரிய கட்சியாமே...?

● .... விபரீத....



உள்ளாட்சித் தேர்தலைத் தொடர்ந்து காங்கிரஸ் அமைதி காத்து வருகிறது. அக்கட்சிக்கு ஒதுக்கப்பட்ட பல உள்ளாட்சித் தலைவர் பொறுப்புகளில்

# தி.மு.க.வைக் கண்டு பயமா?

**— கிருஷ்ணசாமி பேட்டி**

போட்டியிட்ட அதிகாரபூர்வ வேட்பாளர்கள், தோற்கடிக்கப்பட்டிருக்கிறார்கள். தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் கிருஷ்ணசாமியிடம் இது பற்றிக் கேட்டோம். நீண்ட தயக்கத்துக்குப் பிறகு, வார்த்தைகளை அளந்து பேசினார்.

**உள்ளாட்சித் தேர்தலில் தங்களுக்குப் போதுமான இடங்கள் ஒதுக்கப்படவில்லையென்று காங்கிரஸில் ஒ 'தரப்பினர்' பொருமிக் கொண்டிருக் கிறார்களே...**

"இது தவறான குற்றச்சாட்டு. உள் ளாட்சித் தேர்தலில், அனைத்துத் தரப்பின ரையும் திருப்திப்படுத்தும் அளவுக்கு ஸீட் வழங்கப்பட்டது. காங்கிரஸ் மேலிடப் மிகுந்த அக்கறை எடுத்துக்கொண்டு பார்வையாளர்களை அனுப்பி வைத்து தி.மு.க.விடம் உரிய இடங்களைப் பெறு வதற்கு உதவியாக இருந்தது. காங்கி ரஸிலும் எல்லாத் தரப்பினருக்கும் உரிய பங்களிப்பு இருப்பதுபோல் பார்த்துக் கொண்டது."

**உள்ளாட்சித் தேர்தல் அன்று நடந் அராஜகங்களை கம்யூனிஸ்டுகள் கடுமை யாகக் கண்டித்து வருகின்றனர். ஆனால் காங்கிரஸ் அமைதியாக இருந்து விட் டதேன்!**

"கலாட்டா, பூத் கேப்சர் நடந் வார்டுகளில் உயர்நீதி மன்றத்தின் அனுமதியோடு மறுதேர்தல் நடத்தப் பட்டதே! சென்னையில் 155 வட்டா களிலும் வன்முறை நடந்ததாக அ.தி.மு.க மற்றும் ம.தி.மு.க சொல்லும் கருத்துகளை ஏற்றுக்கொள்ள முடியாது. முதல்வா கலைஞர் பாரபட்சமில்லாமல் வன் முறைக்குக் காரணமானவர்கள் மீது நடவடிக்கை எடுத்து வருகிறார். ஆளு கட்சியின் எம்.எல்.ஏ ஒருவரே கைது செய்யப்பட்டிருக்கிறாரே!"

**உள்ளாட்சிகளில் உங்களுக்கு ஒது கப்பட்ட பொறுப்புகளில் தி.மு.க.வின போட்டியிட்டு வெற்றி பெற்றிருக்கிறா களே! இதேபோல் பாதிக்கப்பட்ட**

பா.ம.க., தி.மு.க.வை கடுமையாகக் கண்டித்தது. ஆனால் காங்கிரஸ் மௌன மாகக் கிடக்கிறது... தி.மு.க.விடம் பயமா?

''பல்வேறு ஊராட்சிகளில் காங்கிரஸுக்குப் போதுமான உறுப்பினர்கள் இல்லாவிட்டாலும் ஒதுக்கிய இடங்களில் காங்கிரஸ் சார்பாக தலைவர்களைத் தேர்ந்தெடுக்க நிச்சயம் உதவியாக இருப்போம் என்று தி.மு.க. வாக்குறுதி கொடுத்தது. ஆனால், காங்கிரஸ் கட்சியின் அதிகாரபூர்வ வேட்பாளர்கள் பல இடங்களில் தோற்கடிக்கப்பட்டுள்ளனர். இதற்கு தி.மு.க. மட்டும் காரணம் அல்ல; எங்கள் ஆட்களும்தாம். சில பகுதிகளில் காங்கிரஸ் கட்சியினர், வேறு பல கட்சிக்காரர்கள் உதவியுடன் அதிகாரபூர்வ காங்கிரஸ் வேட்பாளர்களையே தோற்கடித்து உள்ளனர். எல்லாம் கோஷ்டி மனப்பான்மையால்தான். இது குறித்து பட்டியல் எடுத்து வருகிறோம். மேலிட கவனத்துக்குக் கொண்டு செல்வோம். சரி, காங்கிரஸில் மட்டும்தானா இப்படி நடக்கிறது? மிக ஒழுக்கமான, கட்டுப்பாடான கட்சிகளில்கூட மேலிடக் கட்டளைகளை மீறி உள்ளூரில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் செயல்பட்டிருக்கிறார்கள். நூற்றுக்கணக்கான தலைவர்களை உள்ளாட்சிகளில் தேர்ந்தெடுக்கும்போது இதுபோன்று குறுக்கு வோட்டுகள் (Cross voting) குழப்பத்தை உருவாக்குவதைத் தவிர்க்க முடியாது.''

**“ வதந்திகளைப் பற்றி எனக்கு எதுவும் தெரியாது! ”**

**'அதிகாரத்தில் பங்கு' என்ற கோஷம் சில காங்கிரஸ் பிரமுகர்களால் எழுப்பப்பட்டதே... அது தொடர்வதற்கான அவசியம் இருக்கிறதா?**

''அதிகாரத்தில் பங்கு இருந்தால் காங்கிரஸ்காரர்கள் மகிழ்ச்சியடையக் கூடும். ஆனால், கடந்த சட்டமன்ற தேர்தலுக்கு முன் 'ஆட்சியில் பங்கு கொள்ள மாட்டோம்' என்று எங்கள் மேலிடம் அறிவித்துவிட்டது. எனவே இதில் முடிவெடுக்க வேண்டியது எங்கள் மேலிடம்தான்.''



**உங்களை மாற்றப் போவதாக காங்கிரஸில் ஒரு பகுதியினர் வதந்திகளைக் கிளப்பி விடுவது பற்றி?**

''தமிழகத்தில் உள்ள அனைத்து காங்கிரஸ் பிரமுகர்களின் கருத்துகளையும் கேட்டுத்தான் நான் செயல்பட்டு வருகிறேன். இந்த விஷயத்தில் எந்த ஈகோவும் பார்க்காமல் நேரிடையாகப் பலரைச் சந்தித்து, கட்சியின் வளர்ச்சிக்குப் பாடுபட்டு வருகிறேன். எல்லாத் தரப்பினரும் எனக்கு உதவியாக இருக்கிறார்கள். அன்னை சோனியா என் மீது நம்பிக்கை வைத்திருக்கிறார். நீங்கள் சொல்லும் வதந்திகளைப் பற்றி எனக்கு எதுவும் தெரியாது.''

**- ப்ரியன்**



# வெண்மைப் புரட்சிக்கு

சுமார் ஐம்பது வருடங்களுக்கு முன்பு, குஜராத் மாநிலம் கைரா மாவட்ட கிராமங்களில் மிகச் சிறிய அளவில் துவக்கப்பட்ட உற்பத்திதான், இன்று அகில உலக அளவில் அமுல் என்ற பெயரைப் பிரபலமாக்கி, கின்னஸ் உலக சாதனைப் புத்தகத்தில் இடம்பெறும் அளவுக்குப் பிரம்மாண்டமாக வளர்ச்சி பெற்றுள்ளது. இந்தப் பெருமைமிகு சாதனையின் பின்னணியில் இருப்பது குஜராத் மாநில கூட்டுறவு பால் விற்பனை இணையமும் அதன் முதுகெலும்பாக விளங்கும் லட்சக்கணக்கான கிராம மக்களும்தான். பால் விற்பனைக்காக ஆரம்பிக்கப்பட்ட இந்த அமைப்பு, இன்று வெண்ணெய் வகைகள், நெய், சீஸ், பால் பவுடர், குழந்தைகளுக்கான பாலுணவு, இனிப்பு வகைகள், சாக்லேட், ஐஸ்கிரீம் என்று ஏராளமான பொருட்களைத் தயாரித்து, ஆண்டுக்கு சுமார் மூன்றாயிரத்து எழுநூறு கோடி ரூபாய்க்கு விற்பனை செய்து வருகிறது. நம் நாட்டில் மிக அதிகமாக ஏற்றுமதி செய்யும் நிறுவனங்களில் ஒன்றாகவும் விளங்குகிறது.

அமுல்யா என்றால் விலை மதிப்பில்லாதது என்று அர்த்தம். இந்த வெற்றிப் பெயருக்குப் பின்னால் கிராம அளவிலான பால் உற்பத்தி செய்யும் கூட்டுறவுச் சங்கங்கள் பெரும் பங்கு வகிக்கின்றன. இந்தச் சங்கங்களிலிருந்து நாள்தோறும் ஆறுகோடி லிட்டர் பால் கிடைக்கிறது.

இந்தப் பால் சேகரிக்கப்பட்டு, மாவட்ட அளவிலான பால் பண்ணைகளுக்குக் கொண்டு வரப்படுகிறது. இந்த மையங்களில் பால் பதப்படுத்தப்பட்டு, பல்வேறு பால் பொருட்களாகத் தயாரிக்கப்படுகின்றன. இவை அமுல் என்ற பெயரில் விற்பனையாகின்றன. ஒரு பொருளை தரமாக உற்பத்தி செய்துவிட்டால் மட்டும் போதாது. அதனை வாடிக்கையாளர்களுக்குக் கொண்டுபோய் சேர்க்க வேண்டுமல்லவா? அந்தப் பணிக்காக, குஜராத் மாநில அளவில் உருவாக்கப்பட்ட அமைப்புதான் குஜராத் கூட்டுறவு பால் விற்பனை இணையம். சிரிய நிர்வாகத் திறன், தொழில்நுட்பம், வியாபார உத்திகள், தரக்கட்டுப்பாடு ஆகியவற்றின் காரணமாக குஜராத் கூட்டுறவு பால் விற்பனை இணையம் வெற்றிகரமான நிறுவனமாக விளங்குகிறது.

அமுலின் அபார வெற்றிக்கு உறுதுணையாக இருந்தவர் 'இந்திய பால் பண்ணைத் தொழிலின் தந்தை' என்று போற்றப்படும் டாக்டர் வி.குரியன். குஜராத் கூட்டுறவு பால் விற்பனை இணையத்தின் தலைவராக இருந்தவர். குரியனைப் போலவே, அமுலின் இன்றைய வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்தவர் ஒரு குட்டிப்பெண். அவர்தான் அமுல் வெண்ணெய் விளம்பரங்களில் தோன்றும் அமுல் சுட்டிப் பெண். பாரம்பரிய இந்திய முகம்கொண்ட இந்தச் சிறும் உருவாக்கப்பட்டு நாற்பது வருடங்கள்





ஆகிவிட்ட போதிலும் இன்னமும் முகத்தில் துறுதுறுப்பு குறையாமல் அனைவரையும் தலைமுறைகள் கடந்து கவர்ந்திழுக்கிறாள்.

1966-ல், ஏ.எஸ்.பி. என்ற விளம்பர நிறுவனத்தின் நிர்வாக இயக்குநரான சில்வெஸ்டர்தான் இந்த அமுல் கட்டிப் பெண்ணை உருவாக்கினார். நாட்டு நடப்பைப் பற்றி அந்தச் சுட்டிப் பெண்ணின் பார்வையிலேயே விளம்பர வாசகங்களை உருவாக்கி, ஒரே சமயத்தில் நாடெங்கும் விளம்பர ஹோர்டிங்குகளில் இடம்பெறச் செய்து, மக்களின் கவனத்தை ஈர்த்தார். ஆரம்ப நாட்களில் அமுல் ஹோர்டிங்குகளின் கீழ் மக்கள் கூடி நின்று அண்ணாந்து பார்த்து ரசித்தார்கள் என்பது சரித்திரம்.



அமுல்




# வித்திட்ட அமுல்!

தம்மை விமர்சித்த ஓர் அமுல் விளம்பரத்தை மிகவும் ரசித்த பிரபல ஓவியர் எம்.எஃப்.ஹுசைன், அதன் பெரிய சைஸ் புகைப்படம் ஒன்றைத் தமக்கு அனுப்பி வைக்க முடியுமா என்று கடிதம் எழுதினார். பிள்ளையாரைப் பற்றி 'கொழுக்கட்டை வேண்டாம். அமுல் வெண்ணெய் கொடுங்கள்' என்ற வாசகங்களை நீக்கினால்தான் ஆச்சு என்று சிவசேனைக்காரர்கள் மிரட்டினார்கள். ஆனால் அமுல் கட்டிப் பெண் அதற்கெல்லாம் அசரவில்லை. மிக நீண்டகால விளம்பரச் சாதனைக்காக அமுல் விளம்பரம் கின்னஸ் உலக சாதனைப் புத்தகத்தில் இடம்பிடித்துள்ளது.




இன்று அமுல் தயாரிப்புகளுக்கு அகில உலக அளவில் பெரிய மார்க்கெட் உருவாகிவிட்டது. அமெரிக்கா, ஆஸ்திரேலியா, சீனா, தென்னாப்பிரிக்கா, சிங்கப்பூர், ஹாங்காங், மொரிஷியஸ், அரபு நாடுகள் என்று உலகின் பல்வேறு நாடுகளுக்கும் அமுல் பொருட்கள் ஏற்றுமதியாகின்றன.

சரி, அமுல் சூப்பர் பிராண்டின் வெற்றி ரகசியம் என்ன? காரணங்களைப் பட்டியலிடுகிறார் வர்கீஸ் குரியன்... "லட்சக்கணக்கான கிராம மக்களின் முழுமையான அர்ப்பணிப்புதான் அமுலின் வெற்றிக்கு அடித்தளம். தரமான பொருளாகவும் வாடிக்கையாளர்களுக்குத் தர வேண்டும். விலையும் சகாயமாக இருக்க

எஸ்.சந்திரமௌலி



வேண்டும். சீக்கிரத்தில் கெட்டுவிடக் கூடிய பாலிலிருந்து அனேகவிதமான பால் பொருட்களைத் தயாரித்து, அவற்றை அதிக பட்ச காலம் கெடாமல் பாதுகாப்பதற்கேற்ற தொழில்நுட்பத்தைப் பயன்படுத்த அமுல் தயங்கியதில்லை. தரமில்லாத எந்தப் பொருளையும் வாடிக்கையாளர்கள் தொடர்ந்து வாங்க மாட்டார்கள். எனவே, அமுல் பொருட்கள் உலகத் தரத்துக்கு உற்பத்தி செய்யப்படுகின்றன. மேலும், தட்டுப்பாடு ஏதுமில்லாமல் வாடிக்கையாளர்களுக்கு அமுல் பொருட்கள் கிடைக்க, அனைத்து நடவடிக்கைகளும் எடுக்கப்படுகின்றன. புதுமையான விளம்பர யுக்தியும் கைகொடுக்க, அமுல் சூப்பர் பிராண்டாகத் திகழ்கிறது என்கிறார்."

**அமுல் பொருட்கள் உலகத் தரத்துக்கு உற்பத்தி செய்யப்படுகின்றன. தட்டுப்பாடு ஏதுமில்லாமல் வாடிக்கையாளர்களுக்கு அமுல் பொருட்கள் கிடைக்க அனைத்து நடவடிக்கைகளும் எடுக்கப்படுகின்றன.**

**அமுல் - சில தெரியாத தகவல்கள்:**

* 1996-லேயே தமக்கென்று ஒரு வெப்சைட்டை அமுல் நிறுவனம் உருவாக்கியது.
* அமுல் தயாரிப்புகளான ஸ்ரீகண்ட், பாசந்தி, குலோப் ஜாமூன் ஆகியவை வட இந்தியா முழுக்க மிகவும் பிரபலம்.
* தற்போது சராசரியாகத் தினம் அறுபது லட்சம் லிட்டர் பால் சேகரிக்கப்பட்டாலும் தொண்ணூற்று ஒன்பது லட்சம் லிட்டர் அளவுக்குப் பால் பதப்படுத்தும் வசதிகளைப் பெற்றிருக்கின்றன குஜராத்தின் பன்னிரண்டு மாவட்டங்களில் அமைந்துள்ள பால் பண்ணைகள்.
* ரூத் ஹிருதயா என்ற எழுத்தாளர் அமுலின் வெற்றிக் கதையினை புத்தகமாக எழுதி இருக்கிறார்.
* அமுலின் இணைய தளம் www.amul.com

**சவால்**

## திருடனைக் கண்டு ஓடி ஒளிந்தார் போலீஸ்காரர் கடன் தொல்லை!



- படித்தவுடன் உங்களை நகைக்க வைக்கும் மேற்கண்ட ஜோக்கூபோல (கண்டிப்பாக மூன்று வரிகளுக்கு மிகாமல்) நீங்களும் எழுதலாமே... சிறந்தவையாகத் தேர்ந்தெடுக்கப்படும் எட்டு ஜோக்கூக்களுக்கு தலா ரூ.250 பரிசாக வழங்கப்படும். ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது. சாதாரண அஞ்சலட்டையில் எழுதினால் போதுமானது. ஓர் அஞ்சலட்டையில் கண்டிப்பாக ஒரு ஜோக்கூ மட்டுமே. கடைசி தேதி : 20.11.2006. என்ன, ரெடியா? எடுத்துட்டீங்களா பேனாவை?

**பரிசு ரூ.2000/-**



# ஜோக்கூ எழுதுங்க!

*அனுப்பவேண்டிய முகவரி :*

ஆசிரியர், ஜோக்கூ எழுதுங்க,
கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல்,
சென்னை - 600 032.

# இனி வேண்டாம்

குழந்தையின்மை என்பது தம்பதியரிடையே இன்றைக்குப் பரவலான தொரு பிரச்னையாக உருவெடுத்து விட்டது. இந்நிலைக்குப் பல காரணங்கள் கூறப்படுகின்றன. இதற்குத் தீர்வு தான் என்ன? ஈரோடு 'மாருதி மெடிக்கல் சென்டர்' மகப்பேறு மருத்துவர் நிர்மலா சதாசிவம் இது குறித்த விஷயங்களை விளக்கியபோது...



• டாக்டர் நிர்மலா சதாசிவம்

“மலட்டுத் தன்மையினை இருவிதமாகப் பிரிக்கலாம். திருமணமாகி ஒன்று முதல் ஒன்றரை வருடங்களில் எந்தக் கருத் தடை முறையையும் பின்பற்றாமல், கணவன்-மனைவி இருவரும் சேர்ந்து வாழ்ந்தும், கருத்தரிக்காத நிலையா? அது ஒருவித மலட்டுத் தன்மை. திருமணமாகி ஒன்றிரண்டு முறை கருத் தரித்து, அது கலைந்து போயிருந்தாலோ, குழந்தை குறைப் பிரசவத்தில் பிறந்திருந் தாலோ அல்லது முதல் குழந்தை பிறந்து, அடுத்து கர்ப்பம் தரிப்பதற்கு 10, 15 ஆண்டுகள் ஆனாலோ, அது இன்னொருவித மலட்டுத்தன்மை.

சிறுவயதில் உண்டாகிற பொன்னுக்கு வீங்கி நோயின் பாதிப்பு, இரத்தநாளக் குறைபாடு, பால்வினை நோய், உயிரணு குறைபாடு போன்றவற்றால் ஆண்களுக்கும், கருப்பைக் கட்டி, கருக்குழாய் அடைப்பு, சினைப்பை கட்டி, இனப் பெருக்க இயக்கக் குறைபாடு, தாமதத் திருமணம் போன்றவற்றால் பெண்களுக்கும் மலட்டுத்தன்மை ஏற்படலாம். இவை தவிர ஆண்களுக்கு விதைப்பையில் மரபுக் கோளாறு, பெண்களுக்கு முட்டைப்பையில் மரபுக் கோளாறு, பிறவியிலேயே கர்ப்பப்பை இல்லாமல் பிறப்பது போன்றவையும் அடங்கும். இந்நிலையில் ஆண் - பெண் இருவருக்குமே சோதனைகள் அவசியம். முதலில் ஆணுக்கு விந்தணுச் சோதனை மற்றும் ஹார்மோன்களுக்கான இரத்தப் பரிசோதனை அவசியம். பெண்ணுக்கும் ஹார்மோனுக்கான இரத்தப் பரிசோதனை மற்றும் டிரான்ஸ் வஜைனல் ஸ்கேனிங் என்ற ஸ்கேன் செய்யப் பட வேண்டும். மாதவிலக்கு ஆனதிலிருந்து 11-ஆம் நாள் செய்யப்படும் இந்த ஸ்கேனில், சினைமுட்டை வளர்கிறதா என்பதைப் பார்க்கலாம். அடுத்து மாதவிலக்கான 8 அல்லது 9-ஆம் நாள் கருக் குழாய்களுக்கான சோதனை மேற் கொள்ள வேண்டும்.

சோதனைகளில் இருவருக்கும் பிரச்னைகள் இல்லை என்பது உறுதியானால், அவர்களுக்கு இயற்கையாகவே கருத்தரிக்கும் வாய்ப்புகள் உள்ளதாக அர்த்தம். மாதவிலக்கான 10 முதல் 20-ஆம் நாளுக்குள் கருமுட்டை வெளியாகும் 11-ஆம் நாள் ஒரு ஸ்கேன் செய்து, முட்டையின் அளவைப் பார்த்து, எந்த நாட்களில் உறவு கொண்டால் கருத்தரிக்கிற வாய்ப்புகள் என்பதையறிந்து, 2 முதல் 3 மாதங்கள் வரை இந்த முறையைப் பின்பற்றிப் பார்க்கலாம். இதில் 18 முதல் 20 சதவிகிதம் வெற்றி வாய்ப்புண்டு.

விந்து ஊசி சிகிச்சை முறையில் 11ஆம் நாள் பெண்ணுக்குச் செய்யப்படுகிற ஸ்கேனில் கருமுட்டையைக் கவனித்து, அது உடையும் நாள் கணக்கிடப்படும். ஆணின் சுத்திகரிக்கப்பட்ட உயிரணு, முட்டை உடைந்த பிறகு பெண்ணின் கருப்பையினுள் செலுத்தப்படும். 25 சதவிகித வாய்ப்புள்ள இந்த முறையை அதிக பட்சம் ஆறு தடவைகள் மட்டுமே செய்யலாம்.

அடுத்தது, சோதனைக் குழாய் சிகிச்சை. பெண்ணுக்கு ஒரு மாதத்தில் ஒரு முட்டை மட்டுமே உருவாகும். ஹார்மோன் ஊசி போட்டு முட்டைப்பைகள் தூண்டப்படும். கரு முட்டைகளின்

எண்ணிக்கையும் வளர்ச்சியும் அதிகரிக்கப்படும். பிறகு பிரத்யேக ஊசி மூலம் இந்த முட்டைகள் வெளியே எடுக்கப்படும். கணவரின் சுத்திகரிக்கப்பட்ட உயிரணுக்களுடன் சேர்த்து, சோதனைக் குழாயில் 2 முதல் 5 நாட்கள் வரை வளர்க்கப்படும். இப்படி வளர்க்கப்படுகிற கரு, பிறகு பெண்ணின் கருப்பைக்குள் வைக்கப்படும். இதை Embryo Transfer என்கிறோம். இதையே கூடுதலாகச் சில நாட்களுக்கு அதாவது, ஐந்து நாட்களுக்கு வளர்த்தால் வெற்றி வாய்ப்பு இரண்டு மடங்காகிறது. இந்த சிகிச்சைக்கு பிளாஸ்டோசிஸ்ட் கல்ச்சர் டெக்னிக் என்று பெயர்.

லேசர் ஹாட்ச்சிங் என்றொரு சிகிச்சை முறையும் உண்டு. வயதான பெண்ணின் கருமுட்டையின் வெளிப்புறப் பகுதி தடித்திருக்கும். அது இளநீர்

# கவலை!

சீவுகிற மாதிரி சீவப்பட்டு, கருப்பையில் வைக்கப்படும் எம்பிரியோ க்ளு எனப்படும் ஒருவித கருத்திசு பசையை உபயோகித்து, கருவானது கருப்பையில் ஒட்டி வளர வழி செய்யப்படும்.

சினைமுட்டைப் பையே இல்லாமல் பிறந்த பெண்களுக்கும்,



தீவிரமான ஹார்மோன் குறைபாடுள்ள பெண்களுக்கும், மெனோபாஸ் ஆன பெண்களுக்கும் கருமுட்டை தான முறை உகந்தது. 30 வயதுக்குட்பட்ட வேறொரு பெண்ணின் கருமுட்டைகள் சேகரிக்கப்பட்டு, கணவரின் உயிரணுக்களுடன் சேர்த்து சோதனைக் குழாயில் வைத்து வளர்க்கப்பட்டு, இந்தப் பெண்களின் கர்ப்பப்பையினுள் வைக்கப்படும்.

இளவயதில் திருமணமானவர்கள் என்றால், ஒன்று முதல் ஒன்றரை வருட காலம் காத்திருந்து, அதன் பிறகும் கருத்தரிக்காவிட்டால் மருத்துவரை அணுகலாம். முப்பது வயதுக்கு மேல் திருமணம் செய்தவர்கள் என்றால், ஆறாவது மாதத்திலேயே மருத்துவரைப் பார்க்கலாம். இன்றைக்கு நவீன பல சிகிச்சைகள் நமக்கு அறிமுகமாகிவிட்டன. எனவே குழந்தையில்லாத் தம்பதியர் இனி அடைய வேண்டாம் கவலை'' என்கிறார் டாக்டர் நிர்மலா சதாசிவம்.

**- ரேவதி**



**இளம் வயதில் திருமணமானவர்கள் ஒன்று முதல் ஒன்றரை வருட காலம் வரை காத்திருந்து, கருத்தரிக்காவிட்டால் மருத்துவரை அணுகலாம்.**

"ஏர்ஹோஸ்டஸ் பணி என்றால் முன்பெல்லாம் பெண்கள் மட்டும்தான் நினைவுக்கு வருவார்கள். காலம் மாறி விட்டது. எல்லாத் துறைகளையும் போல இதிலும் புரட்சி ஏற்பட்டு, இப்போது ஆண்களும் இப்பணிகளில் அதிக அளவில் சேர்ந்து வருகிறார்கள். மிகுந்த வேலைவாய்ப்பு கொண்ட துறையாக இது மாறிவிட்டது" என்கிறார் சென்னை ஏவியேஷன் ஆஸ்பிட்டாலிட்டி மேனேஜ்மென்ட் (AHM) லிமிடெட்டின் நிர்வாக இயக்குநர் ஆர்.எஸ்.அஸ்வின்குமார். ஏர்ஹோஸ்டஸ் பணிக்கான பயிற்சியில் முன்னணியில் இருக்கும் இந்நிறுவனம், பயிற்சி முடிப்பவர்களுக்குத் தகுந்த வேலைக்கும் உத்தரவாதமளிக்கிறது. இந்தியா முழுவதும் பதினைந்து கிளைகள்.

உலகளாவிய விமான விற்பனைக் கண்காட்சியில் அதிகமான ஃப்ளைட்டுகளை வாங்கியது இரண்டு நாடுகள்தான். ஒன்று சீனா; மற்றொன்று இந்தியா. நம்மைவிட பொருளாதாரத்திலும், தொழில்நுட்பத்திலும் சீனியராக விளங்கும் சீனாவைவிட அதிகமாய் 508 ஃப்ளைட்டுகள் வாங்கத் திட்டமிட்டிருக்கிறோம்.

இப்படி இந்தியா விமானத்துறையில் அதீத வளர்ச்சி கண்டு வருவதால் ஏர்ஹோஸ்டஸ் வேலைக்கு இன்று மவுசு கூடிவிட்டது. பல்வேறு நாடுகளும், ஃபைவ் ஸ்டார் அந்தஸ்து பெற்ற விமான



# ஏறுமுகம் காணும் ஏர்ஹோஸ்டஸ் படிப்பு!

"பத்து வருடங்களுக்கு முன்பு இந்தியன் ஏர்லைன்ஸ் மட்டுமே இருந்த நிலையில் விமான வேலை என்பது குதிரைக் கொம்பாக இருந்தது. ஆனால் இன்றைய நிலைமையே வேறு. எண்ணற்ற ஏர் லைன்ஸ்கள் தொடங்கப்பட்டு, விமானத்தில் பணிபுரிய ஆள் பற்றாக்குறை நிலவி வருகிறது. காரணம் ஒவ்வொரு ஏர்லைன்சும் அறுபதுக்கும் குறையாத விமானங்களைப் பயன்படுத்துகின்றன. ஒவ்வொரு ஃப்ளைட்டுக்கும் குறைந்தபட்சம் 200 பணியாட்கள் தேவைப்படுகின்றனர்.

"அடுத்த இரண்டு வருடங்களில் உலகளவில் 40,000 பணியிடங்கள்!"

நிறுவனங்களும்கூட இந்தியர்களையே ஏர்ஹோஸ்டஸ் வேலைக்குச் சிவப்புக் கம்பளம் விரித்து அழைக்கின்றன. இதற்கும் காரணமில்லாமல் இல்லை. 'உபசரிப்பு' என்பது நம் இந்தியர்களின் இரத்தத்தில் ஊறிய ஒன்று. கல்வி அறிவிலும் சிறந்தவர்களாகத் திகழ்வது இன்னொரு அம்சம். எல்லாவற்றையும்விட வெளிநாட்டினரைக் காட்டிலும் குறைந்த சம்பளத்துக்கு அதிக நேரம் உழைக்கிறார்கள். பயணிகளிடம் நன்றாகப் பேசிப் பழகுவதிலும் சர்வீஸ் செய்வதிலும் நம்மவர்

களை மிஞ்ச ஆளில்லை.

ஏர்ஹோஸ்டஸ் வேலைக்கான பயிற்சிகளும் இன்று எளிமையாகிவிட்டன. இன்னும் இரண்டு வருடங்களில் உலக அளவில் வருடத்துக்கு 40,000 பணியிடங்கள் காலியாக இருக்கும். இந்தப் படிப்புக்கு இலட்சக்கணக்கில் பணம் செலவாகுமே என்று பயந்த காலமும் மலையேறிவிட்டது. எங்கள் AHMமையே எடுத்துக்கொண்டால் ஒரு வருட காலப் பட்டயப் பயிற்சிக்கே மிகக் குறைந்த கட்டணம்தான் வசூலிக்கிறோம். இந்தியா முழுவதும் எங்களுக்குக் கிளைகள் இருப்பதால் இது சாத்தியமாகிறது.

கல்வித் தகுதி என்று எடுத்துக்கொண்டால் குறைந்தபட்சம் பன்னிரண்டாம் வகுப்புப் படித்திருக்க வேண்டும். ஆங்கிலத்தில் சரளமாகப் பேசி, இன்முகத்தோடு பழகுகிற மனப்பக்குவம் உள்ளவர்களாக இருத்தல் வேண்டும். ஆண்கள் 5 அடி - 6 அங்குல உயரமும், பெண்கள் 5 அடி 3 அங்குல உயரமும் இருக்க வேண்டும். +2க்கு மேல் படித்தவர்களுக்குப் பதவி உயர்வு சீக்கிரம் கிடைத்து விடும்.

விமான உபசரிப்புப் பணியை ஒரு வேலையாக எண்ணாமல், சேவையாக ஏற்கும் மனப்பக்குவம்தான் மிக முக்கிய தகுதியாகக் கொள்ளப்படும். பல்வேறு விதமான மனிதர்களை எதிர்கொள்ளும் திறன், அன்போடு நட்பு பாராட்டுவது எல்லாமும் அவசியம். இது குறித்தெல்லாம் பயிற்சிகள் அவசியம். அவைதான் எங்கள் பாடங்கள்.

ஏர்ஹோஸ்டஸ் பணி உயர்தட்டு



மக்களிடம் நல்ல பழக்கத்தையும், உலகம் சுற்றும் பறவையாக வாழக்கூடிய மகிழ்ச்சியையும் தரக்கூடியது. எனவே இன்றைய இளைஞர்கள் ஏர்ஹோஸ்டஸ் படிப்பை ஒரு கனவாகவே எடுத்துப் படிக்கலாம். அந்தக் கனவுக்கு நிச்சயம் பலன் உண்டு" என்கிறார் அஸ்வின்குமார்.

**- வினோ**

படம்: **பொள்ளாச்சி சுந்தரம்**



• ஆர்.எஸ். அஸ்வின் குமார்

## விமர்சனம்

லேட்டா வந்தாலும் நீட்டா வந்திருக்காரு காட்ஃபாதர். மூணு வேஷத்துல வந்து ஒவ்வொண்ணுலயும் வித்தியாசப்படுத்தி காண்பிச்சதுக்கு முதல் சபாஷ். ரொம்ப நாளாகுது அஜீத் இப்படியொரு நடிப்பைக் கொடுத்து, நாம பார்த்து! அப்பா-பிள்ளை பழிவாங்கற ஓல்டு டைப் கதைதான். ஆனா ட்ரீட்மெண்ட் புதுசு, இளசு, ஒரு நினுசு. பெண்மைத்தனம் இழையோட அஜீத் வர்ற காட்சிகள்ல தியேட்டர் அல்லோலகல்லோலப்படுது. தொத்தாபுரம் சீன்ஸ் செம லகலக. ஆனா காலேஜ் புரொபசரே கவர்ச்சி வலை



கறதால, பாட்டுகளை தனியா ஷூட் பண்ணது, அஜீத்தோட 'திருப்பதி' பாடி லேங்குவேஜ்ல வெட்ட வெளிச்சமாயிடுது. வீடு புகுந்து ரகளை பண்ற காதலனை, தோழியையே கற்பழிக்க முயன்ற




விரிக்கறது டூமச். அஜீத்தும் அஜீத்தும் மோதிக்குற, உருளுற டெக்னிக்கல் ஷாட்ஸ் எல்லாம் செம ஹைடெக்!

கனிகாதான் நிஜ ஹீரோயின், அசின் காமெடிக்குதான். மனநிலை சரியில்லாத அம்மாவை பாழாப்போன சமூகத்துகிட்டருந்து காப்பாத்தி வளர்க்கற கதையை, ஒரே பாட்டுல துள்ளத் துடிக்கச் சொன்ன விதம், இதம். யார் அந்தச் சின்னப் பையன்? குட்!

அதே நேரத்துல ஒரு சில குறைகளையும் சொல்லித்தான் ஆகணும். நல்லா இருக்குன்னாலும் அடிக்கடி பாட்டுங்க வந்து 'கிளம்பிட்டாங்கய்யா'ன்னு புலம்ப வச்சி, ஆடியன்ஸோட வேகத்தைக் குறைச்சிடுது. லேட்டா வந்த படம்ங்கறதால,

வனை ஜஸ்ட் லைக் தட் அவன் மன்னிக்கறது நிஜ சினிமா சீன்ஸ்!

ஏ.ஆர்.ரஹ்மானோட இசையில 'இன்னிசை அளபடையே' மியூசிக்கல் டச். 'தினம் தினம் தீபாவளி', 'கம்மா கம்மா', 'இளமை' பாடல்களும் சோடை போகல.

அப்பா அஜீத் காலை உதைச்சு உதைச்சு பேசும்போதே, ஃப்ளாஷ்பேக், நடனத்தோடு ஆரம்பிக்கறது, க்ளைமாக்ஸ்ல அஜீத் மாதிரியே கல்யாண மண்டபத்துல பலரை உலவ விடறதுன்னு டைரக்டரோட 'பன்ச்' அங்கங்கே டாலடிக்குது.

அஜீத்துக்கு இனி ஏறுமுகம்தான்!

- லஜ்ஜாவதி

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 06 - 08 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 06 - 08* Registered as a Newspaper in Srilanka.